அன்பரசு சண்முகம்
ராமமூர்த்தி அய்யாவு



# ஒரு துளி மணலில் ஓர் உலகு

கடிதங்கள்

ஒரு துளி மணலில் ஓர்
உலகு

கடிதங்கள்

அன்பரசு
சண்முகம்

ஆரா பிரஸ்

கோமாளிமேடை

பதிப்பாசிரியர்: அன்பரசு சண்முகம்

நூல் வடிவமைப்பு: ஆரா பிரஸ், சென்னை

வெளியீட்டு அனுசரணை: Komalimedai.blogspot.com

தொடர்புக்கு: Arapress@protonmail.com

அட்டை வடிவமைப்பில் உதவி: Canva.com

அட்டைப்படம்: Pixabay



வெளியீடு: மே, 2020

இனிய உறவுகளுக்கு, வணக்கம்.

இந்த கடிதங்கள் எனது பள்ளிப்பருவத் தோழர் ராமமூர்த்திக்கு நான் எழுதியவை. இவற்றை நான் பத்தாவது படிக்கும்போதிலிருந்து அவருக்கு எழுதிவந்தேன். ஆனால் அவரின் வீடு இடம் மாற்றல், அலுவலக வேலை மாறியது என பல்வேறு இடங்களுக்கு மாறியதில் நிறைய கடிதங்கள் தொலைந்துவிட்டன. இந்த கடிதங்களையும் அவருக்கு இடைவிடாமல் தொல்லை தந்துதான் வாங்கினேன். வறிய சூழ்நிலையில் படித்து வளர்ந்து, கந்துவட்டிக்கு கடன் வாங்கி கல்லூரி சென்று இன்று அரசுப் பணியாற்றி வருகிறார். தாழ்த்தப்பட்ட ஜாதியில் பிறந்து அதற்கான அத்தனை சிக்கல்களையும் அநீதிகளையும் எதிர்கொண்டு போராடி இந்த வேலையைப் பெற்றிருக்கிறார் எனபது எனக்கு மகிழ்ச்சி தரும் நினைவுகளில் ஒன்று.

இன்று நாங்கள் அலைபேசி, குறுந்தகவல்கள் மூலம் பேசிக்கொள்கிறோம். நான் எப்போதும் போல அவருக்கு கடிதங்களை எழுதிவருகிறேன். கடிதம் எழுதுவது வேற்றுகிரகவாசிகள் பூமிக்கு வந்தது போன்ற எண்ணத்துடன்தான் அனைவரும் பார்க்கின்றனர். அவரவரின் பார்வைக்கு ஏற்ப உலகம் தெரியும். அவ்வளவுதான். இதில் முக்கியம் தகவல் பரிமாற்றம் என்பதுதான்.

அந்தந்த சூழல்களை எழுத்து வடிவாக பதிவது முக்கியம் என்று நினைக்கிறேன். தொழில்நுட்பம் காலந்தோறும் மாறிக்கொண்டுதான் இருக்கும். கடிதம் எழுதுவதை நான் மனதுக்கு நெருக்கமானவர்களிடம் பேசும் வழிமுறையாக நினைக்கிறேன். இக்கடிதங்கள் அந்தந்த காலகட்ட நிகழ்வுகளையும், எனது மனதை பாதித்த விஷயங்களையும் பதிவு செய்துள்ளேன். கற்றதும் பெற்றதுமான நிகழ்ச்சி உரையாடலில் சாத்தியம். இதனை வாசிப்பவர்களுக்கும் அந்த அனுபவம் கிடைக்கும் என்று நம்புகிறேன். ஆனந்தமாக வாசியுங்கள். நூல் பிடித்திருந்தால் எங்களது மின்னஞ்சல் முகவரிக்கு கருத்துகளை அனுப்புங்கள். நன்றி!

அன்பரசு சண்முகம்

arapress@protonmail.com

*2016*

1

# பாரத தேசத்தில் எது நிஜம் எது பொய்?

*இனிய தோழர் ராமமூர்த்திக்கு, வணக்கம். நலமா?*

நான் இதை எழுதும்போது கறியமுது உண்டுகொண்டிருப்பீர்கள். அதுசரி, நீங்கள் பட்ட கஷ்டங்களுக்கு பதிலடியாக சாப்பிட்டு காலத்தை பழிவாங்குகிறீர்கள். மனிதர்கள் வாழத்தான் வேண்டாமா என்ன?

பதஞ்சலி பொருட்களின் விளம்பரங்களைப் பார்த்தேன். ஆனால் கூட பொருட்களை வாங்குவதற்கு பெரிய நம்பிக்கை வரமாட்டேன்கிறது. ஆனால் மக்கள் இதுதான் இப்போதைக்கு டிரெண்டிங் போல என்று பொருட்களை பாய்ந்து வாங்கி வருகிறார்கள். பாபா ராம்தேவைப் பொறுத்தவரை நம் நாட்டில் நிலப்பரப்பு சார்ந்த பொருட்களை மக்கள் வாங்கவேண்டும் என்று நினைக்கவில்லை. தன்னுடைய லேபிளில் மக்கள் பொருட்களை வாங்கவேண்டும் என்கிறார். அவ்வளவுதான். இப்படி பரிந்து பேசுவதால் அவரின் பொருட்கள் சிறப்பாக தயாரிக்கப்படுகின்றன என்று கூறிவிட முடியாது.

தேன் 250 கிராம் வாங்கிப்பார்த்தேன். எழுபது ரூபாய். ஆனால் தரத்தின் அடிப்படையில் அது தேனா என்றே எனக்கு சந்தேகம். அறை நண்பர் எதுக்கு இந்த கலப்பட தேனை வாங்கிட்டு வந்தே? என்றார். இத்தனைக்கும் அதன் வாசத்தை மட்டுமே

முகர்ந்து பார்த்தார். டாபர் தேன் 200கி. ரூ.122 எனும்போது மக்கள் பதஞ்சலி தேனை ஏன் வாங்க மாட்டார்கள்? பதஞ்சலியில் 500 கி. தேன் ரூ.135தான். விலையைக் குறைத்து பிற பொருட்களில் கலப்படம் என்று சொல்லித்தான் பதஞ்சலி மார்க்கெட்டைப் பிடிக்கிறதே ஒழிய தன்னுடைய பொருளை நன்றாக இருக்கிறது என எப்போதும் சொன்னதே இல்லை. பதஞ்சலியிலும் உற்சாக பானங்கள், கார்ன்பிளேக்ஸ், நூடுல்ஸ் ஆகியவை உண்டு. மேகி நூடுல்ஸ் மீது காரியம் அதிகம் உள்ளது என புகார் எழும்பும்போது பதஞ்சலி நூடுல்ஸை விற்கத்தொடங்கியது. மக்களின் ஆரோக்கியத்தின் மீது ராம்தேவுக்கு என்ன ஒரு அக்கறை பார்த்தீர்களா?

அனைத்திலும் இந்தி வார்த்தையைக் கவனமாக பயன்படுத்துகிறார்கள். மேலும் மேட் இன் பாரத் என பிரின்ட் செய்கிறார்கள். பாரதம் எங்கே இருக்கிறது என்று எனக்கு தெரியவில்லை. சோப்பு, ஃபேஷ்வாஷ், ஷாம்பு, தேங்காய் எண்ணெய், சலவை சோப்பு, பிஸ்கெட்டுகள் என அனைத்தும் உள்ளன. பிற உற்பத்தியாளர்களிடம் தங்களது பாக்கெட்டில் பொருட்களை போட்டுத்தரச்சொல்லி அதனை மார்க்கெட்டிங் மட்டும் பதஞ்சலி பேரில் செய்கிறார்கள் போல. சாமியார்களின் ஆட்சிதானே

நடக்கிறது. என்னவாகும் என சில ஆண்டுகளில் தெரிந்துவிடும். ராம்தேவுக்கு முன்னரே வாழும் கலை ரவிசங்கரின் ஸ்ரீஸ்ரீ பொருட்கள், சத்குருவின் பொருட்கள் சந்தையில் உள்ளன. அதாவது, தனியான அவர்களின் ஸ்டோர்களில். இவர்கள் அனைவருக்கும் முன்னோடி கார்ப்பரேட் குரு ஓஷோதான்.

*நன்றி*

*சந்திப்போம்*

*ச.அன்பரசு*
*14.3.2016*

2

# கருத்து ஏற்படுத்தும் அதிர்ச்சி!

அன்புத் தோழர் ராமமூர்த்திக்கு, வணக்கம்.

சமீப காலங்களில் எழுதுவது, போனில் பேசுவது எல்லாவற்றிலும் நானே முன்னே இருப்பது போல உணர்கிறேன். எனவே உங்கள் கருத்தை நீங்கள் எழுதி அனுப்பினால் நன்றாக இருக்கும். நெருக்கமான நண்பர் நீங்கள் ஒருவரே என்பதால் அனைத்தையும் கொட்டி விடுகிறேன் என்று நினைக்கிறேன்.

பொதுவாக பட்டியலினத்தவர்கள், ஆதிதிராவிடர்கள் பற்றிய நூல்கள் விடியல், கருப்புப்பிரதிகள், காலச்சுவடு, அலைகள், கீழைக்காற்று ஆகிய பதிப்பகங்களில் கிடைக்கும். இன்றுள்ள தாழ்த்தப்பட்டோர்களின் தலைவர்கள் பொதுசமூகம் தன்னை ஏற்கும் விதமாக கருத்துகளை உருவாக்கி வென்று விடுகின்றனர்.

ஆனால் அனைத்து சமூகத்தினரும் பங்கேற்கும் விதமான நடவடிக்கைகளை செய்வது போல தெரியவில்லை. நீங்கள் எந்த அரசியல் தலைவர்களின் மாநாட்டிற்குச் சென்றாலும் சில நாட்கள் அந்த கருத்துகளின் அதிர்விலேயே இருப்பீர்கள். கவனமாக இருங்கள்.

பேச்சு என்பது குறிப்பிட்ட ஒலி. அவ்வொலி நமது உடலில் குறிப்பிட்ட உணர்வுகளைத் தூண்டுகிறது. எனவே, தேவையில்லாத மேடைப்பேச்சுகளைக் கே ட் டு சங்கடப்படுத்தும்விதமான சிக்கல்களுக்கு உள்ளாகாதீர்கள். ரொமிலா தாப்பர், ராமச்சந்திர குஹா ஆகியோரின் கட்டுரை நூல்களை வாசித்திருப்பீர்கள். நடுநிலை என்று கூற முடியாது. ஓரளவு பல்வேறு தரவுகளை அறிந்து படிக்க உதவிகரமாக இருக்கலாம். நீங்கள் அரசியல் அறிவியல் மாணவர் என்பதால் மேற்சொன்ன எழுத்தாளர்களின் நூல்களை முன்னமே படித்திருப்பீர்கள். நான் சிந்திப்பதும் எழுதுவதும் நூல்களை படிப்பதும் என்னுடைய கவனத்திற்குட்பட்டவற்றை மட்டுமே செய்கிறேன். நாமே கருத்துகளை உருவாக்கி அதனை செம்பமைப்படுத்த வேண்டும். அதற்கு நீங்களாகவே சிந்தித்து கருத்துகளை உருவாக்கிக்கொண்டு பேசுவது நல்லது.

*நன்றி !*

*சந்திப்போம் !*

*ச.அன்பரசு*

*8.4.2016*

3

# கற்றதும் பெற்றதும்!

இனிய தோழருக்கு, வணக்கம் நலமாக இருக்கிறீர்களா?

முடிந்தவரை தொடர்ச்சியாக நாட்குறிப்பு எழுத முயலுங்கள். அது பின்னாளில் உங்கள் துறை சார்ந்த விஷயங்களை நூலாக எழுத உதவும். உங்களது தங்கைக்கு குழ்ந்தை பிறந்துள்ளது மகிழ்ச்சியான செய்தி. புதிய மலர்ச்சி பொருந்திய உயிரைப் பாதுகாக்கப் போகிறீர்கள். நாம் குழந்தைகளுக்கு ஏதையும் கற்றுத்தர வேண்டியதில்லை. கற்பதற்கான

வாய்ப்பை நாம் உருவாக்கவேண்டும். மற்றபடி அவர்கள் வளரும்போது நமக்கு பல விஷயங்களைக் கற்க வாய்ப்பு கிடைக்கும்..

குடும்பத்தில் அதிகரிக்கும் செலவுகள் பற்றி பயப்பட்டுக்கொண்டு இருப்பீர்கள். செலவைக் குறைக்க வழி கிடையாது. அதற்கேற்ப சம்பாதிப்பது மட்டுமே எதிர்காலத்திற்கு உதவும். நவீன காலத்தில் ஒருவருக்கு பிடிக்கிறவராக இருப்பது கடினம். அதற்கு நீங்கள் ஏராளமான பொருட்களை வாங்கிக் கொடுக்கவேண்டும். நேரத்தை ஒதுக்கவேண்டும். அனைவரும் ஒருவரையொருவர் சார்ந்தே இருக்கிறோம்.

தனித்தன்மை கொண்டவன் என நிரூபிக்க பலரும் முயன்றுகொண்டே இருக்கிறார்கள். ஆனால் மக்களைப் பொறுத்தவரை அது ஆபத்தில்தான் முடிந்திருக்கிறது. இதை நானாக சொல்லவில்லை. வரலாறு அப்படித்தான் சொல்லுகிறது. அவர்களால் உலகம் நிச்சயமாக நிம்மதியாக இருக்கமுடியாது. அந்தளவு மூளை கொதிப்பான ஆட்கள் உலகை மக்களை சும்மா விடமாட்டார்கள். ஏறத்தாழ நீங்கள் நினைத்தபடி அரசு வேலைக்கு போய்விட்டீர்கள். எனவே முடி கொட்டுவதற்கு முன்பு திருமணத்தை செய்துவிடுங்கள். உங்களுக்கு சொந்தமாக உறவில்

பெண்கள் இருப்பதாக சொன்னீர்கள். அப்புறம் மயக்கம் என்ன ராமமூர்த்தி?

மனம், உடலின் தேவை இரண்டும் தீர்க்கும்படியான துணை தங்களுக்கு கிடைக்க இறையைப் பிராத்திக்கிறேன். துர்முகி ஆண்டு பிறந்திருக்கிறது. உங்களுக்கு ஜாதகம் சார்ந்து நம்பிக்கை கிடையாது. வீட்டில் இருப்பவர்களைப் பார்த்து கவனமாக திருமணத் துணையைத் தேர்ந்தெடுக்கச் சொல்லுங்கள். வாழ்க்கை நன்றாக இருக்கவேண்டும் அல்லவா? வண்ணதாசன் சொல்வதை அப்படியே சொல்லுகிறேன். நல்லா இருங்க!

சந்திப்போம்.

ச.அன்பரசு
8.4.2016

4

# பெரியாரின் தொண்டன்!

இனிய தோழர் அன்பரசு அவர்களுக்கு, வணக்கம்.

நான் உண்மையில் கஷ்டப்பட்டு படித்தேன். அதனை நீங்கள் அருகிலிருந்து பார்த்திருக்கிறீர்கள். எனக்கு பெரிய ஆதரவு கிடையாது. சாதியிலும் உறுதுணை உற்றதுணை யாருமில்லை. இந்த நேரத்தில் எனக்கு கிடைக்கும் வேலை, அதுசார்ந்த பொருளாதாரம் மட்டுமே என்னை காப்பாற்றும் நிலை. அந்த விஷயத்தில் என் உழைப்பிற்கான பலன் கிடைத்தது.

உங்களைப் பொறுத்தவரை நீங்கள் பேசும் விஷயங்கள் என்னை ஆச்சரியப்படுத்தியுள்ளன. பத்திரிகையில் நீங்கள் உட்காருவீர்கள் என நம்பினேன். நான் நினைத்தாற்போலவே நீங்களும் இதழியலில் ஓர் அங்கமாக ஓடத் தொடங்கிவிட்டீர்கள். ஆச்சரியமாக இருக்கிறது. நாம் இருவரும் கருத்திபாளையத்திலுள்ள அந்த சிறிய வீட்டில் ஓஷோவின் எழுத்துகள் பற்றி விவாதித்தது அடிக்கடி என் நினைவிற்கு வந்து போகிறது. அந்த ஊரின் பல்வேறு இடங்களில் நாம் பல்வேறு நூல்களைப் பற்றி பேசியுள்ளோம். நிறைய நூல்களை நீங்கள் படித்துவிட்டு எனக்கு அறிமுகப்படுத்தினீர்கள். அதற்கு நான் என்றுமே நன்றியுடையவன் ஆவேன்.

ஆசையோடு நான் புள்ளியல் துறை நூல்களைப் படித்து, வேலைக்கு வந்தேன். ஆனால் இங்கு அனைத்தும் தவறாக உள்ளது. உறுதியாக நான் என் பணியை செய்து வருகிறேன். எனக்கு அப்போதுதான் வாங்கிற சம்பளக்காசில் தின்கிற சோற்று பருக்கைகள் செரிக்கும்.

உங்களுக்கே தெரியும் நான் பெரியாரின் தொண்டன். கருப்புச்சட்டைதான் எனக்குப்பிடித்த ஒரே சட்டை. என்னிடமிருந்த ஒரு சட்டையை அது

கிழியும் வரை எப்படி ஆவேசத்தோடு அணிந்திருப்பேன் என்பதை அறிந்திருப்பீர்கள். மனசாட்சிப்படி நேர்மையான நடப்பது ஒருவருக்கு மிக அவசியம். அவரின் ஜாதகப்படி அவர் நடந்துகொள்வார் என்பதில் எனக்கு நம்பிக்கையில்லை. பெண் பார்க்கும் சடங்கில் நான் அவற்றை வலியுறுத்தவரும் போவதில்லை.

நீங்கள் நன்றாக இருக்கிறீர்களா? உங்களுக்கும் எனக்கு வயது வித்தியாசம் கிடையாது. அப்படியெனில் நீங்கள் எப்போது திருமணம் செய்யப் போகிறீர்கள்?

*நன்றி!*

*அ.ராமமூர்த்தி*

*10.4.2016*

5

# காசுக்கான அனுசரிப்பு!

*அன்புத் தோழர் ராமமூர்த்திக்கு, வணக்கம்.*

*நலமாக இருக்கிறீர்களா?*

*தேர்தல் பணிகள் முடிவடைந்து இயல்பு வேலைக்கு திரும்பியிருப்பீர்கள் என்று நினைக்கிறேன். பெரும்பாலான காசை உணவிற்காக செலவிட்டிருப்பீர்கள். தேர்தல் பற்றிய அருள்வாக்குகளை தொலைக்காட்சிகள் சொல்லத் தொடங்கியுள்ளன, நியூஸ்7, தின புய்ப்பம் என*

இரண்டு ஊடகங்களும் பசுமை கட்சிக்கு விளக்கு பிடிக்கிறார்கள்.

இதைப் புரியாதவர்கள் இறந்துபோன ஜெ.வால் ஊடகங்களுக்கு ஆபத்து என கூறி பேசி வருகிறார்கள். இதில் புரிந்துகொள்ள முடியாத விஷயம் என்ன? அனைத்தும் அசைன்மெண்ட்தான். அடித்துக்கொள்ள என்ன இருக்கிறது? அனுசரித்து போகவேண்டியதுதான். தேர்தலில் அனைத்தும் இழந்தவர்கள் கூட இலவசங்கள் வாங்க நம்முடன் லைன் கட்டலாம். காலம் எதைத்தான் செய்யாது?

கண்ணுக்கு எதிரே குழிவெட்டி அதில் விழுகிற எல்லாமே உங்களுக்குத்தான் என சைகோ குஜயகாந்தையே குழப்பி அடித்துவிட்டார். தோல்வி எதிர்பார்த்ததுதான் என்ற வார்த்தையை மறக்க முடியுமா? அதை விகடன், சைகோ குளிர் கண்ணாடியோடு சொகுசாக இருக்கும் படத்தை போட்டு கிண்டல் செய்கிறது.

தினமலரில் ஜெயமோகன் எழுதி வெளியான ஜனநாயக சோதனைச் சாலையில் நூலை படித்திருக்கிறீர்களா? நான் இந்த தொடரை பத்திரிகையில் வெளியானபோதே படித்திருக்கிறேன். வாய்ப்பிருந்தால் நீங்கள் இந்த நூலை வாங்கி படியுங்கள். உங்களுக்கு எஸ்.ரா பிரியம் என்றாலும்

ஜெயமோகனின் எழுத்து உங்களை வசீகரிக்கும். யானை டாக்டர் நூலை படித்திருக்கிறீர்கள்தானே?

நன்றி!
சந்திப்போம்.

அன்பரசு
25.5.2016

## 6
# நடைமுறைக்கு உதவாத வறட்டுவாதங்கள்!

அன்பிற்கினிய தோழர் ராமமூர்த்தி அவர்களுக்கு, வணக்கம். நலமாக இருக்கிறீர்களா?

தங்களுடைய வாசிப்பு என்னை மகிழ்ச்சிக்கு உள்ளாக்குகிறது. உங்களுக்கான திசையை நீங்கள் கண்டுபிடித்துவிட்டீர்கள் என நம்புகிறேன். விழிப்புணர்வு என்பது வரலாற்றிலிருந்து தொடங்குகிறது. தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட எழுதப்பட்ட திறமான நூல்கள் நிறைய ஆங்கிலத்தில் கிடைக்கின்றன. என்ன? ஆசிரியரின் பெயரைப் பார்த்து வாங்கியாகவேண்டும்.

தீக்கதிர், பாரதி புத்தகாலயம் போன்ற இடதுசாரி

வகையறாக்களை நீங்கள் நூலகத்தில் படித்துவிட முடியும். வெகு ஆண்டுகளாக நூலகத்தில் உள்ள நூல்கள் இந்த அமைப்பு சார்ந்த நூல்களாகவே உள்ளன. இவர்கள் தங்கள் கொள்கைகளிலிருந்தே விலகி வருகின்றனர். இதில் உறுப்பினராக சேருவதும், அமெரிக்க சீல் படையில் சேரும் ஒன்றுதான். இரண்டுமே மிக கடினம்.

இவர்களின் சித்தாந்த விஷயங்களை குங்குமம் ஆசிரியர் கே.என். சிவராமன் அவர்களே சிவந்தமண் என்ற நூலில் எழுதிவிட்டார். ஆர்வமிருந்தால் நூலை வாங்கிப் படியுங்கள். எளிமையாக இருக்கும். இதற்கும் மேலான ஆர்வத்தில்தானே நீங்கள் புதிய ஜனநாயகத்திற்கு சந்தா கட்டி படித்து வந்தீர்கள். இதில் பெரும்பாலும் பிராமணர்கள்தான் தலைமை தாங்குகிறார்கள். மாற்றங்களை உடனே தனதாக்கிக்கொண்டு வென்றுவிடும் சாமர்த்தியம் அவர்களுக்கு இருக்கிறது. அதுதான் உண்மை.

அவசியமானதை தேர்ந்தெடுத்து படியுங்கள். மார்க்கம் சார்ந்து போனால் சிந்தனையும் அந்தவழியில்தான் செல்லும், குழப்பிக்கொள்ள வேண்டாம்.
வறட்டு வாதங்களை நரம்புகள் புடைக்க பேசலாம். ஆனால் அவற்றை நடைமுறைப்படுத்தி அதன்

பயன்களை பார்க்காமல் யாரும் அதனை பின்பற்ற தயாராக இல்லை. பேக்கரி நாற்காலியில் நன்கு சாய்ந்து உட்கார்ந்து எதிரே இருப்பவர்கள் முட்டாள்கள் என்று நினைத்து பேச நினைக்கிறீர்களோ அப்போதே மக்களிடமிருந்து விலகத் தொடங்கிவிட்டீர்கள் என்று பொருள். செயல்களுக்கும் மனதிற்கும் தொடர்பிருக்கிறது என்று நம்புகிறீர்களா இல்லையா?

நன்றி

சந்திப்போம்.

ச.அன்பரசு
19.6.2016

7

# சன்னி லியோனும், சமநீதியும்!

*இனிய தோழர் ராமமூர்த்திக்கு, வணக்கம். நலமா?*

*வெகுநாட்களுக்குப்பிறகு இருவரும் அலைபேசி*

வழியாக உரையாடியது மகிழ்ச்சி. எப்போதும் போலத்தான் நான் பேசினேன். பிறர் எழுதும் நூல்களைப் படித்துவிட்டு அதைப்பற்றிய கருத்துகளை அன்றிலிருந்து இன்றுவரை நான் கூறிக்கொண்டிருக்கிறேன். உங்களுடைய திராவிடக்கழகம் சார்ந்த சிந்தனை நன்றாக இருந்தாலும், தங்கத்தாரகை விருது கொடுப்பவர்களின் செயல்பாடு அருவருப்பாக இருக்கிறது. ஏறத்தாழ தேய்ந்துவரும் இடதுசாரிகளைப் போலவே தி.கவினரும் குறைந்து வருகிறார்கள். இவர்கள் குறைந்து வருகிறார்கள் என்று சொல்லலாம். அல்லது தங்களுக்கேற்ற வேறு இயக்கங்களை நாடிச் செல்கிறார்கள் என்று சொல்லலாம்.

அறிவிற்கும், ஞானத்திற்குமான போராட்டம் முற்றுப்பெறுவதே இல்லை. எதிர்ப்பவர்கள் ஒரு கட்டத்தில் சிலரை குறித்து வைத்துக்கொண்டு இவர்கள் என்ன சொன்னாலும் எதிர்ப்போம் என்று சொல்லுவது புத்திசாலித்தனமாக படவில்லை.

தொன்மையான அனைத்தும் புனிதமான விஷயங்கள் கிடையாது. சித்த மருத்துவத்தை எடுத்துக்கொள்ளுங்கள். அதனை அரசு இன்று முன்மொழிவது செலவு குறைவு என்பதால்தான்.

அதில் ஆராய்ச்சி கிடையாது. ஆனால் அதில் குணமாகும் சில நோய்களும் உண்டுதானே? நிலப்பரப்பு சார்ந்த மருத்துவத்தை நான் நம்புகிறேன். சித்த மருத்துவத்திலும் ஜோதிடம் இயல்பாகவே உள்ளே இருக்கிறது. நான் இவற்றை முதலில் உள்வாங்கிக்கொள்ள நினைக்கிறேன். அதில் மூடநம்பிக்கை இருப்பதை அதை எதிர்க்கவேண்டும் என்பதை பின்னரே முக்கியமாக கொள்ளலாம்.

திராவிடக்கழகம் முதற்கொண்டு கல்வி சார்ந்த சொத்துக்களை காக்க யார் காலை வேண்டுமானாலும் நக்கும் நிலைக்கு வந்துவிட்டார்கள். அப்படித்தானே அவர்கள் எதிர்க்கும் ஆட்களுக்கு விருதுகளை அறிவிக்கிறார்கள். எனக்கு திறன் சார்ந்து பணி கிடைக்கும் என்று தலித் பத்திரிகைக்கு விண்ணப்பித்தில் நீ என்ன சாதி என்று கேட்டுத்தான் உட்காரச் சொன்னார்கள். இவர்கள்தான் சமூகநீதிக்கு கொடி பிடித்து சகோதரத்துவத்தை வலியுறுத்துகிறார்கள். இதற்கு தனக்குப்பிடித்த கருத்தை இதுதான் என வெளிப்படையாக சொல்லும் ஆட்கள் பரவாயில்லை. பாருங்கள். இப்படிப்பேசினால் மண்டைச்சூடு அதிகரிக்காதா? சன்னி லியோன் நமக. காட்சி அருள் தாயே!

8

# நச்சைப் பரப்பும் வடக்கு!

இனிய தோழன் ராமமூர்த்திக்கு, வணக்கம். நலமாக இருக்கிறீர்களா?

செய்திகளைப் படித்து எனக்கு மனதே ஆறவில்லை. நெஞ்சு பொருமிக்கொண்டே இருக்கிறது. ஆனால் வேறுவழியில்லை. மைய அதிகாரம் அனைத்து இடங்களிலும் இந்து, இந்தி, இந்தியா என பேசிக்கொண்டும் விஷத்தைப் பரப்பிக்கொண்டும் இருக்கிறது. நேர்மையான நோக்கம் எப்போதும் பிரச்னை இல்லை. ஆனால் சுரண்டலுக்கான லட்சியவாத மறைப்புகளை காவிக்கட்சி தொடர்ச்சியாக செய்து வருகிறது. வருமானம் வருகிறதோ இல்லையோ அனைவரையும் வரி

வரம்புக்குள் கொண்டு வர மத்திய அரசு துடிப்புடன் செயல்படுகிறது.

நான் தற்போது அய்யா வைகுண்டர் பற்றி வெ.நீலகண்டன் எழுதிய நூலைப் படித்துக்கொண்டு இருக்கிறேன். இதில் சாதி, தீண்டாமை பற்றிய பகுதிகள் அருவருப்பு ஊட்டுகின்றன. திருவிதாங்கூர் சமஸ்தானத்தில் நிலவிய முலைவரி முறையை நீங்கள் படித்திருப்பீர்கள். 15—35 வயது வரையிலான பெண்கள் முலையை மறைக்க கூடாது. அப்படி மறைத்து மேலாடை அணிந்தால் அதற்கு வரி உண்டு. இந்த வரி பிரச்னையால் முலைகளை அறுத்து எறிந்துவிட்டு இறந்துபோன பெண்கள் அங்கு உண்டு.

நான் முன்னர் வேலை செய்த பத்திரிகையில் மெய்ப்பு திருத்தும் பணியில் இருந்தவர் இலங்கை தமிழ் ஆள். வேலை நன்றாக செய்பவர்தான். ஆனால் நச்சுக்கருத்துகள் அதிகம் மனதில் உண்டு. தலித்துகள் எப்போதுமே ஒழுங்கு மீறுபவர்கள்தான் என்று ஒருமுறை பேச்சினூடே சொல்லுகிறார். ஏன் இப்படியான கருத்துகள் அவர் மனதில் உருவாகின்றன? டைம்ஸ், துக்ளக் ஆகியவற்றை எழுத்து மாறாமல் படித்துவிட்டு காபி குடிப்பார்கள். இதில் பெறும் அறிவை வைத்து பிரிவினைகளுக்கும்

வெறுப்பு கருத்தியல்களுக்கும் இவர்களைப் போன்றோர்தான் நெய்சோறு ஊட்டுகிறார்கள்.

மதம், சாதி கடந்து அனைத்தும் கடந்தவராக காட்டிக்கொள்ளும் இலங்கைக்காரர் எப்போதும் காபி மட்டுமே குடிப்பார். எலைட் மோஸ்தருக்கு வந்துவிட்ட ஆட்கள் பல்வேறு இடங்களில் நச்சு கருத்துகளை விதைத்து வருகிறார்கள். நாகபட்டினம் அருகே தலித் மக்கள் வழிபடுவதற்கு அரசு அனுமதியளித்திருந்த ஆடி விழா தற்போது நிறுத்தப்பட்டுள்ளது. அரசுக்கு அடுத்துவரும் தேர்தலில் கவனம் போலிருக்கிறது. சுயநலனுக்கும் பின்னேதானே இங்கு பொதுநலன் அணிவகுக்கிறது.

மம்முட்டி, கனகா நடித்த கிளிப்பேச்சு கேட்கவா என்ற படம் பார்த்தேன். யூடிபில்தான். பேய்ப்படம் போல சென்ற படம் அப்படியே மறக்க முடியாத காதல் படமாக மாறியது. அன்பே வா அருகிலே என்ற பாடல் பிரமாதமாக இருந்தது. மம்முட்டி, கனகா இருவரும் நன்றாக நடித்திருந்தார்கள். உங்களது அலுவலகப் பணிகள் நன்றாக செல்கிறதா? புறா மார்க் சோப்பு தட்டுப்பாடின்றி உங்கள் பகுதிக்கு கிடைக்க இறைவனை வேண்டுகிறேன்.

நன்றி

# தலித்துகளைக் கொல்லும் பார்ப்பனர்கள்!

அன்பு நண்பர் அன்பரசுக்கு, வணக்கம்.

நன்றாக இருப்பீர்கள் என நினைக்கிறேன். நீங்கள் எழுதிய கடிதத்தைப் படித்தேன். இயக்கத்தைத் தொடங்கும் தலைவர்களுக்கு இருக்கும் நோக்கம், அதைச்சார்ந்த பொறுப்புணர்வு அடுத்தவர்களுக்கு இருக்கும் என்று கூற முடியாது. அதன் எதிரொலிதான் நீங்கள் கூறிய தி.க தலைவர்கள் பற்றிய கடிதம். அவர்களின் சொத்துக்களை பாதுகாக்கும் எத்தனம் பற்றிய உங்களுடைய கருத்தை நான் ஏற்கிறேன்.

ஆனால் சோதிடம் சார்ந்த உங்கள் கருத்து எனக்கு ஏற்புடையது அல்ல. அதனை நான் கேட்டுக்கொள்கிறேன். ஆனால், உறுதியாக ஏற்கப்போவதில்லை. நீங்கள் இதனை பேசினால் காந்தி போல சாதி வேண்டும் தீண்டாமை கூடாது என்ற புள்ளியில் வந்து நிற்பீர்கள். துரதிர்ஷ்டவசமாக நீங்கள் காந்தி பற்றாளராகவும் இருக்கிறீர்கள். இது போதாதா?

பெரியார் ஏன் சாதியை மட்டுமல்ல பார்ப்பனர்களை தீவிரமாக எதிர்த்தார் என்று உங்களுக்குப் புரிகிறதா? அனைத்து தீமைகளின் பிறப்பிடமாக பார்ப்பனர்கள் தங்களின் அதிகாரத்தை பயன்படுத்தி சமூகத்தை பிளவுபடுத்தினர். ஆனால் அனைத்து விஷயங்களையும் பிறர் மூலமாகவே செய்ய வைத்துவிட்டு தங்களுக்கு எதுவுமே தெரியாதது போல இருந்து வென்றவர்கள் அவர்கள். அவர்கள் தனக்கும், நாட்டிற்கும் கூட நேர்மையாக இருந்தது கிடையாது. பிறரோடு போட்டியிட்டு வெல்வதுதான் போட்டி. ஆனால் பார்ப்பனர்கள் ஓடுதளத்தில் அவர்கள் மட்டுமே ஓடி அவர்கள் மட்டுமே வெல்வார்கள். யூதர்களை பார்ப்பனர்களோடு சிலர் ஒப்பிடுகிறார்கள் அது தவறான ஒப்பீடு. பிறர் நலனிலும் அவர்கள் கருத்தை வைத்தவர்கள்.

நீங்கள் ஒருமுறை வார இதழில் இட ஒதுக்கீட்டின் அவசியம் பற்றி கேள்வி கேட்டு எழுதியிருந்தீர்கள். அது எனக்கு கடுமையான மனவருத்தத்தை ஏற்படுத்தியது. இதனை நீங்களாகவே போனில் பேசியபோது சொன்னீர்கள். எழுதுவதற்கு இடம் கிடைக்கிறது என்றாலும் நீங்கள் சமூகநீதிக்கு எதிராக எழுதியதாகவே உணர்கிறேன். அதுவும் உங்களுடைய ஆல்டர் ஈகோ ஒன்றாக மற்றொரு

பெயரை வைத்து எழுதுகிறீர்கள். நீங்கள் பத்திரிகை துறையில் இருப்பது மகிழ்ச்சி. ஆனால் கணினியில் தட்டச்சு  செய்யும்முன் எழுதும் விஷயத்தை சற்று யோசித்து எழுதுங்கள்.

தமிழகத்தில் மட்டும்தான் இட ஒதுக்கீடு 69 சதவீதம் எனபதை அறிந்திருப்பீர்கள். மத்திய அரசு உ ய ர் க ல் வி நிறுவனங்களில் தலித்துகள் படிக்க சேர்ந்தாலும் எப்படி தற்கொலை செய்துகொள்ள தூண்டப்படுகிறார்கள் என்பது உங்களுக்கு தெரியாதா? அதற்கு காரணம் என்ன? அங்குள்ள மேல்தட்டு சாதிக்காரரர்கள். குறிப்பாக பார்ப்பனர்கள் தானே?

இந்த விஷயம் உங்களது பத்திரிகைகளுக்கு தெரிந்தாலும் அமைதியாக இருப்பீர்கள். உங்கள் ஆசிரியர் யார் என்று உங்களுக்கும் தெரியும். நீங்கள் யார் என்பதும் அவருக்குத் தெரியும். பரஸ்பர சகாயங்களுக்காக உங்களுக்கு கீழேயுள்ள மக்களை என்னவேண்டுமானலும் செய்யும் இதழியல் பணி ஆபத்தானது நண்பரே. நீங்கள் வெளிப்படையாக பேசுகிறவர் என்பதால் இந்த விஷயங்களை சொன்னேன். நாம் சாதியைக் கடந்தவர் என்பதை பிறருக்கு சொல்லுவதன் முன் நம் மனதிலுள்ள சாதியை நாம் உணர்வது முக்கியம் என்பதற்காகவே

இதனை சொல்கிறேன்.

நான் செய்யும் பணியில் நிறைய தவறுகள் அதிகாரிகளுக்கு தெரிந்தே நடைபெறுகிறது. உதவி புள்ளியல் ஆய்வாளர் நிலையில் அவற்றை திருத்த முடியாது. ஆனால் எங்கு தவறு நடைபெறுகிறது என்று தெரிகிறது. விரைவில் அவற்றை சரி செய்ய முயல்கிறேன்.

புள்ளியல் துறை எப்படி முக்கியத்துவம் பெறுகிறது என்றால் அரசு குறிப்பிட்ட பகுதியில் விளையும் பயிர்களைப் பொறுத்தே அங்கு வழங்கும் நிதியுதவி பற்றி முடிவெடுக்கும். இங்குள்ளவர்கள் கல்லூரி புராஜெக்டை காப்பியடித்து அடுத்துவருபவர்கள் எழுதுவது போல எழுதிக்கொண்டு இருக்கிறார்கள். இதனால் காங்கேயம் பகுதிக்கு கிடைக்கவேண்டிய விஷயங்கள் கிடைக்க மாட்டேன்கிறது. இதைக்கேட்டால் சாதி சார்ந்து திட்டுகிறார்கள். சொல்லும் வேலையை மட்டும் செய் என்கிறார்கள். நான் உறுதியாக இருக்கிறேன். நான் எடுக்கும் கள ஆய்வில் என்ன உள்ளதோ அதை மட்டுமே எழுதுவேன். வருவதைப் பார்த்துக்கொள்ளலாம் என்று இருக்கிறேன். அலைபேசி வந்தபோதும் கடிதங்கள் எழுதி என்னை வியக்க வைக்கிறீர்கள். தங்களுக்கு என்றுமே எனது அன்பு.

*நன்றி*

*அ. ராமமூர்த்தி*

*24.6.2016*

# 10
# சங்கிலிக் கருப்பன் கோவிலில் சர்க்கரைப் பொங்கல்!

*இனிய தோழர் ராமமூர்த்திக்கு, வணக்கம். நலமாக இருக்கிறீர்களா?*

*உங்களுக்கு திருமண ஏற்பாடுகள் நடைபெறுவது எனக்கு மகிழ்ச்சியாக இருக்கிறது. நல்ல துணைவி அமைய வாழ்த்துகிறேன். இனி எங்களின் வார இதழ் வெள்ளிக்கிழமை அன்று ரிலீஸ்.*

*மானுட ஆய்வாளர் தொ.பரமசிவன் அவர்களின் நூல்களைப் படித்து வருகிறேன். இவரைப் பற்றி நீங்கள் கண்டிப்பாக அறிந்திருப்பீர்கள். மானூட வாசிப்பு — தொ.பரமசிவன் தெறிப்புகள் என்ற தடாகம் பதிப்பக நூலைப் படித்து வருகிறேன். இந்த நூல் உங்களைப் போன்றவர்களுக்கு அவசியம்*

உதவும். இந்நூலில் தமிழர்கள், அவர்களின் உணவு, சோழர்கள், ஆய்வாளர்கள் பற்றி, பெரியார், இந்தி எதிர்ப்பு போராட்டம், இப்போராட்ட காலமாக 1935—67 என்ன வேறுபாடு, தமிழ் தேசியம், நாட்டார் கோவில்கள் என பல்வேறு விஷயங்களைப் பற்றி தெள்ளத் தெளிவாக விடையளிக்கிறார் தொ.ப. விலை. ரூ.100 ஈரோடு புத்தகத் திருவிழாவில் கிடைக்கும். விருப்பமிருந்தால் வாங்கிப் படியுங்கள்.

உனது அலுவலக பணிகளில் முன்னேற்றம் உள்ளதா? தியான வகுப்பிற்கு போவதாக அலைபேசியில் சொன்னீர்கள்? ஸ்டெபானி டேனியல்சின் வீடியோக்கள் நினைவுக்கு வராமல் மூலாதார சக்தி துரியத்திற்கு பாய்கிறதா? காமத்தின் பயனும் அதேதான் அல்லவா?

உங்களுடைய சாதி பற்றிய கருத்தை யோசித்து பார்த்தேன். நான் என்னுடைய உயரத்திற்கேற்ற பார்வையில் அனைவரையும் பார்க்கிறேன். நீங்கள் சொன்ன இட ஒதுக்கீடு பற்றிய செய்தியை இதழின் புகைப்படக்காரரர் வின்சென்ட் பால், மருத்துவ இதழ் நிருபர் கதிரவன் ஆகியோரும் கூட ஆட்சேபித்தனர். ஆனால் அது காலதாமதமாகிவிட்டது. என்னைப் பொறுத்தவரை அதை சிறிய செய்தி என்றே பார்த்தேன்.

கேரளத்தில் உள்ள இளைஞர் அதிக மதிப்பெண்கள் பெற்றும் எனக்கு இடம் கிடைக்கவில்லை என அங்கலாய்திருந்தார். குறைந்த மார்க் எடுத்த கீழ்சாதிக்காரருக்கு இடம் கொடுக்கிறீர்கள் என்று சொன்னவர், படிப்பை கைவிட்டுவிட்டார். இணைய.த்தில் வைரலான செய்தி என்பதால் அதனை எழுதினேன்.

எங்கள் அலுவலகத்தில் தங்கத்தில் பிறப்புறுப்பு கொண்டவர்களுக்கென தனி கழிவறை அமைக்கப்பட்டுள்ளது. அதைப் பயன்படுத்த முக்கியமானவர்களுக்கு மட்டும் ஐ.டி கொடுக்கப்பட்டுள்ளது. நீங்கள் பணி நெருக்கடியில் இருந்தாலும் கீழே சென்று பொதுக்கழிவறையில்தான் மலம, சிறுநீர் கழிக்க முடியும். எங்களுடையது சதையாலானது என்பதை புரிந்துகொண்டோம்.

ஆனால் புரட்சிக்காரரர்கள் அனைத்து இடத்திலும் உண்டு. அந்த கழிவறையின் பூட்டை இதோடு மூன்று முறை உடைத்துவிட்டார்கள். கேமராவில் பார்த்து புரட்சிக்காரன் எவன் என்று கண்டறிய முயற்சி எடுக்கப்பட்டு வருகிறது. பலருக்கும் சமூக நீதி போதிக்கும் பத்திரிகையில் இந்த லட்சணம். விடுங்கள். இங்கு அனைத்துமே சங்கிலிக்கருப்பன்

கோவிலில் சர்க்கரை பொங்கல் வழங்கப்படுவது போல முரணாகவே இருக்கிறது.

*நன்றி!*

*சந்திப்போம்.*

*ச.அன்பரசு*

*11.7.2016*

11

# வாசிப்பும், பயணமும்!

இனிய நண்பர் ராமமூர்த்திக்கு, நலமறிய ஆவல்.

அலைபேசியில் பேசியபோது ஊதிய உயர்வு பெற்றுவிட்டதை சொன்னீர்கள். எனக்கு மகிழ்ச்சி. இனி ஏரோ, பீட்டர் இங்கிலாந்து, லூயிஸ் பிலிப் ஆகிய பிராண்டு ஆடைகளை அணிந்து எங்களுக்குள் பொறாமை கிளர்ந்தெழ செய்வீர்கள் என நம்புகிறேன். உங்களுக்கு பிடித்த மண்ணின் மைந்தரான ராஜ்கிரண் படங்களை வாங்குங்கள். கிடைக்கும் ஓய்வில் மனச்சோர்வுக்கு மருந்தாக அமையும்.

இனி புரோட்டாவுக்கு கோழி குழம்பு குறைவாக ஊத்திட்டானே என பொரும வேண்டியதில்லை. சொகுசான வாழ்க்கைக்கு குட்மார்னிங் சொல்லும் நேரம் வந்துவிட்டது. அட்வைஸ் செய்பவரும் ஆடி காரில் வந்தால்தானே அவருக்கும் மதிப்பு இருக்கிறது. சாதித்தவர் சொல்கிறார் என்று. இனி பணத்தை சேமித்து உங்களுக்கு பிடித்த விஷயங்களைச் செய்யலாம்.

வாய்ப்பு கிடைத்தால் நிறைய நூல்களை வாசிக்க முயலுங்கள். அதைவிட பயணம் வழியாக பெறும்

அனுபவங்கள் முக்கியம். இன்று பல்வேறு சமூக வலைத்தளங்கள் வழியாக நீங்கள் பல்வேறு விஷயங்களை செய்தித்தாள்களை விட வேகமாக பெற முடியும்.

ஆப்பை இன்ஸ்டால் செயதாலே இன்று நம் அந்தரங்கத்தை டெக் நிறுவனங்களுக்கு விற்க வேண்டியிருக்கிறது. என்ன செய்வது? உலகம் அப்படித்தான் இயங்குகிறது. உங்களைப் பார்க்க அன்று காங்கேயம் வந்தபோது சாலையில் அத்தனை வாகனங்கள் பரபரவென செல்கின்றன. எனக்கு திகிலாகிவிட்டது. ஆடி மாதம் வேறு தொடங்கிவிட்டது. போனை நோண்டிக்கொண்டே வந்து மேலே மோதினாலும் ஆச்சரியப்படுவதற்கு ஏதுமில்லை. சாரி என்று சொல்லிவிட்டு அவர்கள் பாட்டிற்கு ஜோம்பி போல சென்று விடுவார்கள். கவனம் ராம்.

நன்றி! சந்திப்போம்.

அன்பரசு

*20.7.2016*

12

# செம்மை செய்யும் பணி!

இனிய தோழர் ராமமூர்த்திக்கு, வணக்கம். நலமாக இருக்கிறீர்களா?

வணக்கம். புத்தகத் திருவிழாவில் புத்தகங்களை விட கலர் பார்க்க சென்றிருப்பீர்கள். அதனாலென்ன, தங்களின் திருப்பாத பாக்கியம் அங்கிருப்பவர்கள் பெற்றதே வரம். உடலை விட மார்க்கெட்டிங் செய்ய வேறு சிறந்த பொருள் என்னதான் இருக்கிறது?

பசி, கோபம் இரண்டையும் ஏதாவது ஒரு வகையில் தீர்க்கலாம். மனதில் எரியும் காமத்தை நீங்களேதான் தீர்த்துக்கொள்ள வேண்டும். மரபணுவில் எழுதப்பட்டுள்ள விஷயங்கள் பட்டியல்படி அப்படியே நடந்தேறும்.

தர்மதுரை உங்களுக்கு பிடித்த இயக்குநர் எடுத்தபடம். சீனு ராமசாமி உங்களை திருப்தி செய்தாரா? தமன்னா நடிக்க முயன்றிருப்பார். சேதுபதி அசால்டாகவே நன்றாக நடிப்பார். தீபாவளி மலருக்கான வேலைகள் தொடங்கிவிட்டன. இதில் கு ழு ம நாளிதழின் நிருபர்கள் ஏராளமான கட்டுரைகளை எழுதி

எங்களுக்கு அனுப்புவார்கள். அதனை நன்றாக அடித்து திருத்தி வா ர பத்திரிகைக்கான விஷயங்களை சேர்த்து தருவது என்னுடைய பணி.

என்னுடையது முடிவானதல்ல. நான் தேவையில்லை என்று நினைக்கும் பகுதிகளை வெட்டி நீக்குவேன். இதற்குப்பிறகு இதனை அழகு செய்யும் பணியை வார இதழ் ஆசிரியர் தி.முருகன் செய்வார். இந்த செயல்பாடு நடைபெறும் முறைக்கு முன்பாகவே ஆசிரியர் குழு சந்திப்பு நடைபெறும். வார இதழ் குழும நிருபர்களும் ஐடியா கொடுத்து கட்டுரை எழுதித்தரலாம். இதற்கு தனியாக பணம் கொடுப்பார்கள்.

இம்முறையில் அறுபதிற்கும் மேற்பட்ட ஐடியாக்கள் கிடைக்கும். அவற்றிலிருந்து கட்டுரைகளை ஆசிரியர் தேர்ந்தெடுப்பார். அவை கட்டுரைகளாக எழுத நிருபர்களுக்கு பணிக்கப்படும். அவர்கள் அதனை எழுதி நேரத்தே அனுப்பிவைத்தால் அதனைத் திருத்தி புத்தகத்தில் போடுவதற்கு ஆசிரியர் ஆவன செய்வார். இதற்கு பணிசெய்யும் அனைவருக்கும் தனிக்காசு உண்டு.

இதற்கான பணிகள் அதிகம். அப்போதுதான் தெரிந்தது, ஏன் வார இதழ் தலைமை உதவி ஆசிரியர் கோகுலவாச நவநீதனுக்கு ஏன் கற்றை

கற்றையாக முடி கொட்டுகிறது என. இந்தப்பணிக்கான அடுத்த ஆள் இப்போது நேர்காணலுக்கு வந்திருக்கிறார். பொறுப்பாசிரியரின் சிபாரிசு என்பதால் த.சக்திவேல் என்ற அவருக்கு விரைவில் இங்கு வேலை கிடைத்துவிடும்.

வாழ்க்கையை சிறப்பாக அனுபவிக்க நூல்கள் வாசிப்பதை கைவிடலாமா என்று கூட எனக்குத் தோன்றுகிறது. அவர் சொன்னார், இவர் சொன்னார் என்று எழுதி வைத்து அதை என்னுடைய எழுத்தாக நான் எப்போதும் கூறப்போவதில்லை. அதற்கான முடிவை தீர்மானகரமாக எடுத்துவிட்டேன்.
நான் சரியான நேரத்தில் சரியான விஷயங்களை துல்லியமாக மறந்துவிடும் துரதிர்ஷ்டசாலி.

இந்த ஆண்டு குருபெயர்ச்சி பலன்கள் அலுவலகத்தில் பார்க்க ஆரம்பித்து விட்டார்கள். எங்கள் வார இதழ் குழுவில் ஒவ்வொரு போல்டாக கழன்றுகொண்டே இருக்கிறது. நன்கு பயிற்சி பெற்றவர்கள் சம்பளப் பற்றாக்குறை காரணமாக புகழ்பெற்ற பத்திரிகை நிறுவனத்திற்கு மாறி வருகிறார்கள். கிளம்புபவர்களின் பிரிவு உபசார விழாவில் புகைப்படம் எடுத்துக்கொண்டே இருக்கிறார்கள். போட்டோ வேண்டாம் என்றால்

*ஆயுள் குறையும் என்று சொன்னால் ஜோக்கு ஒத்து என்று சொல்லி வம்படியாக போட்டோ எடுத்துக்கொள்கிறார்கள்.*

*சந்திப்போம்.*

*ச.அன்பரசு*
*25.8.2016*

## 13
# நவீன கோமாளித்தனம்!

*இனிய நண்பருக்கு, வணக்கம். நலமாக*

இருக்கிறீர்களா?

நீங்கள் கேட்பது போல கறிச்சோறு சாப்பீட்டீர்களா என்று என்னால் கேட்க முடியவில்லை. மன்னிக்கவும். எனது வேலைகள் எப்போதும் போல சென்றுகொண்டிருக்கின்றன. அறையில் புள்ளியியல் துறையில் பணியாற்றும் மற்றொரு நண்பரும் தங்கியிருக்கிறார். வேறு அறை பார்த்து போகவேண்டும் என்றார். ஆனால் அவர் வந்து இரண்டு மாதங்கள் ஆகின்றன சன்ன ரேசில் நகரமாட்டேன்கிறார். தர்ம சங்கடம் என்பார்களே அதுதான் இது.

இங்கு அலுவலகத்தில் பணியாற்றும் பெண்கள் சிலரிடம் நட்பு ஏற்பட்டிருக்கிறது. இவர்களே எனது வாழ்க்கைத் துணைவியாக வருவார்கள் என்று சொல்ல முடியாது. பேசி வருகிறேன். அவ்வளவுதான். எதில் சிறந்த லாபம் கிடைக்கிறதோ அதனை ஏற்றுக்கொள்ள வேண்டியதுதான். இது உங்களைக் கோபப்படுத்தலாம். நடைமுறை அப்படியாத்தானே இருக்கிறது?

எனக்கு இப்போது திராவிடக் கழகத்தை விட அவர்களின் கொள்கைகளை செயல்பாட்டிற்கு கொண்டு வந்த திராவிட முன்னேற்ற கழகத்தின் செயல்பாடுகளே பிடித்தமாதிரி இருக்கின்றன.

அவர்களின் அரசியல் பற்றிய நூல்களை நான் படித்து வருகிறேன்.

சமூகநீதியை கொள்கையாக ஒருவர் பேசுவதற்கும் அதனை நடைமுறைப்படுத்துவதற்கும் வேறுபாடு உண்டு. அந்த விஷயத்தில் நான் திமுகவை, அதன் செயல்பாடுகளை முக்கியமானதாக பார்க்கிறேன். எனக்கு கருப்பு பிடித்த நிறமாக இருக்கிறது. உங்களுக்கு சிவப்பு பிடித்த நிறமாக இருக்கிறது இந்த வேறுபாடுகள்தான் நம்மை ஏதோ ஒரு புள்ளியில் இணைக்கிறது என்று நினைக்கிறேன்.

உங்களுடைய வேலை சார்ந்த முன்னேற்றம் என்னை மகிழ்வடைய வைக்கிறது. இத்தனை படிக்கிறார், இவர் என்ன வேலைக்குப் போவார் என்று நினைத்துக்கொண்டே இருந்தேன். நினைத்தது போலவே பத்திரிகையில் இணைந்துவிட்டீர்கள். சிறியதோ, பெரியதோ உங்களுக்கு பிடித்ததை நீங்கள் செய்கிறீர்கள் என்பது எனக்கு மகிழ்ச்சி. நான் எப்போது மே பிறரை ஒப்பிட்டு என்னை நான் தேற்றிக்கொள்வேன். உங்களுடன் ஒப்பிடுவது இனி சரிவராது. நான் முதலில் அப்படி நினைத்ததற்காக இன்று வருந்துகிறேன்.

அலுவலக கழிப்பறை என்பதில் விஐபிகள், சாதாரணமானவர்கள் என்பது எனக்கு நவீன

கோமாளித்தனம் போல் படுகிறது. சரி, ஆணவம் பிடித்தவர்கள் எந்த இடத்திலும் தன்நிலை மாறாமல் இருக்க இதனை செய்கிறார்கள் போல. மாறணும் மாத்தணும் என்று கஞ்சிக்கு போராடுபவர்கள் எப்படி உரிமைக்கு போராடமுடியும்? எனக்குத் தெரிந்து உங்கள் ஆட்களில் யாரும் கழிவறையை உடைப்பது போன்றதை செய்திருப்பது போல தெரியவில்லை. தைரியமான பிற நிறுவன ஆட்கள் செய்திருக்கிறார்கள். நீங்கள் அச்செயலை மௌனமாக அங்கீகரிப்பது போல தெரிகிறது. திறமையை விட ஒழுக்கம் முக்கியம். அதைக் காரணம் காட்டி சிக்கலை ஏற்படுத்திவிடப் போகிறார்கள்.

நான் இப்போது துறைசார்ந்த பதவி உயர்வுக்காக படித்து வருகிறேன். மற்றபடி தமிழில் முரசொலி மாறன் எழுதிய மாநில சுயாட்சி நூலைப் படித்து வருகிறேன். ஊருக்கு வரும்போது சொல்லுங்கள். சந்திப்போம்.

*நன்றி!*

*அ.ராமமூர்த்தி*

*28.8.2016*

## 14
# கண்ணில் மிதக்கும் இட்லிகள்!

*அன்புத்தோழர் ராமமூர்த்திக்கு, வணக்கம். நலமா?*

*தங்களது அபிமான மாறுவேட நடிகரின் படம் எப்படியோ தயாரிப்பு செலவை ஈடுகட்டிவிட்டது. அவரின் பல்வேறு வேட ஆசைகளால் ஐ படத்தில் அவரைத் தாக்கியதை விட நிறைய வைரஸ்கள் பார்வையாளர்களைத் தாக்கிவிடுகிறது. இதைத்*

தொடங்கி வைத்தது பரமக்குடி வைணவத் தமிழன்தான். இவர்களுக்கு மக்கள் கூட்டத்திற்கு நடுவே மாஸ்டர்பேஷன் செய்வது வழக்கமாகிவிட்டது. என்னைப் பார், என் புத்திசாலித்தனத்தைப் பார் என்று எரிச்சலடைய வைக்கிறார்கள்.

கல்யாணம் சாப்பாடு பற்றி நிறைய முறை புகழ்ந்து பேசியிருக்கிறீர்கள். இனி உங்கள் வீட்டு சாப்பாட்டை சாப்பிட்டுவிட்டு மற்றவர்கள் பேசப்போகிறார்கள் என்பது மகிழ்ச்சியாக இருக்கிறது. ஏறத்தாழ உங்கள் பெற்றோர் மற்றும் நீங்கள் கல்விக்காக வாங்கி கடன்களை பெருமளவு அடைத்திருப்பீர்கள். மீதி சேமிப்பை வைத்து திருமணம் செய்வதற்கான முயற்சிகளை தொடங்குங்கள். திருமண மார்க்கெட்டில் அரசு ஊழியருக்கான சலுகைகள் அதிகம். எனவே, அமெரிக்க ஜல்சா வலைத்தளங்களில் உள்ள அம்சங்களை இங்கு தேடாமல் இருந்தால் சீக்கிரமே உங்களுக்கு மனைவி அமைய வாய்ப்புகள் உண்டு.

நிலமற்று இருக்கிற ஒருவன் பொருளாதாரத்தில் பிறரை சார்ந்து இருக்கும்படி சூழல் இருக்கும். நீங்கள் விரைவிலேயே இந்த சிக்கல்களிலிருந்து விடுபட்டு பொறுப்புகளை ஏற்றுக்கொண்டு

விட்டீர்கள். என்னைப் பொறுத்தவரை இது சாதனைதான். அம்பானி சாதித்தால்தான் சாதனையா? எந்த உதவிகளும் இல்லாத ஒருவர் சாதித்தாலும் சாதனைதான் என நான் நம்புகிறேன். சு.வேணுகோபால் சிறுகதைகளை படித்திருக்கிறீர்களா? படித்தால் உங்களுக்குப் பிடிக்கும்.

உடலுக்கான தேவைகள் என்பது வேறு. அது இயல்பாகவே நம்மை ஏதோ ஒருவிதத்தில் துரத்துகிறது. எல்லோருக்கும் பொதுவான விஷயங்கள் ஒற்றுமையாக அமைவது கடினம். எனக்கு பலமாக சில விஷயங்களை சொன்னால், பலவீனமாக மற்றொன்று இருக்கும். எனக்கு இப்போது வயிற்றுப்பாடு தாண்டி யோசிக்க ஏதுமில்லை. உங்கள் கனவில் இளவன முலைகள் முதுகில் அழுத்த பெண் ஒருத்தி பேசிக்கொண்டிருக்கிறாள் என்பீர்கள். எனக்கு கனவில் கூட இட்லித் தட்டில் ஆவி பறக்கும் காட்சி தாண்டி வேறு எதுவும் தெரிவதில்லை. நம் இருவரின் வயதும் ஒன்றுதான். ஆனால் வாழ்வின் தன்மைகள் வேறுவேறு. இது நம்மை பிரிக்கவில்லை. ஒன்றாக இணைத்திருக்கிறது என்பது பெரிய விந்தைதானே!

*நன்றி !*
சந்திப்போம்

*ச.அன்பரசு*

*12.9.2016*

15

# நிகழ்கணத்தில் வாழ்க்கை!

இனிய தோழர் ராமமூர்த்திக்கு, வணக்கம். நலமாக இருக்க இறைவனைப் பிரார்த்திக்கிறேன்.

நாம் இனி கடந்து வந்த இடங்களுக்கு நாமே நினைத்தாலும் செல்ல முடியாது. அந்தளவுக்கு அனைத்து சூழல்களும் மாறிவிட்டன. கடந்தவை கடந்தவைதான். கடந்தகால நினைவுகள் நமக்கு கிளர்ச்சி தரலாம். ஆனால் அதிலேயே நின்றுவிடமுடியாது. நிகழ்காலத்தின் மதிப்பு அதிகம். அதில் வாழ்வதுதான் சிறந்தது.

அரசுப் பணியாளராக நீங்கள் மக்களோடு மக்களாக இணைந்து பணி செய்வது நல்ல விஷயம். நிர்வாகரீதியாக அரசு அதிகாரிகளுக்கு கூறப்படுவது, நீங்கள் தனிச்சிறப்பானவர்கள். அவர்களிடமிருந்து விலகி இருந்தால்தான் அவர்கள் நிர்வகிக்க முடியும் என்று கூறப்படுவது உண்டு. கோப்புகள் இல்லாத

அரசு அதிகாரிகளின் மேசையைப் பார்ப்பது அரிதாக இருக்கிறது. அரசு என்றாலே தாமதமான நடவடிக்கை, உதவி என்பதால்தான் பலருக்கும் அதன் மீதான நம்பகத்தன்மை குறைந்துவிட்டது.

நீங்கள் உங்கள் பணியை நேர்மையாகச் செய்வீர்கள் என நம்புகிறேன். மனசாட்சிப்படி வாங்கும் ஊதியத்திற்கான உழைப்பைக் கொடுத்தால் போதும். நான் யார், மற்றவர்கள் யார் என்று விளக்கிக்கொண்டிருக்க அவசியமில்லை. இது உங்கள் மனநிம்மதிக்கு அவசியமானது. ஒருவர் தன் வேலையை சரியாக செய்யத் தொடங்கினாலே அவருக்கு ஏராளமான எதிர்ப்புகள் கிளம்பும். சதிகளை மெல்ல நம்மைச்சுற்றி அரங்கேற்றுவார்கள். கவனம். நான் எழுதும் இந்த எழுத்துகளிலுள்ள கிளர்ச்சி கூட தற்காலிகமானதுதான். நீங்கள் உங்கள் மனதில் கொள்ளும் நம்பிக்கையே உங்களை முன்னேற்றும். ஆதிதிராவிடர்களின் வரலாறு பற்றிய படிக்க நந்தனின் பிள்ளைகள் என்ற நூலை வாங்கி படியுங்கள். விலை ரூ. 500. கிழக்கு பதிப்பகத்தில் வெளியிடப்பட்டிருக்கிறது.

நன்றி! சந்திப்போம்

அன்பரசு
28.9.2016

16

# பயணம் ஒன்று போதாது!

இனிய தோழர் ராமுவுக்கு, வணக்கம். நலமாக இருக்கிறீர்களா?

உங்கள் பகுதியிலும் சிவாண்ணாவின் ரெமோ சுனாமி வீசிக் கொண்டிருக்கும். உங்களுக்கு அலைபேசியில் கூறியபடி படிநிலை சார்ந்த கவலைகள் இருக்கலாம். அரசு அலுவலகங்களில் மனசாட்சிப்படி பணி செய்வது கடினம். நீங்கள் பணி செய்வதும் அப்படிப்பட்ட சூழலில்தான் என்று நினைக்கிறேன். பணம் கிடைக்கிறது என்பதைத்தாண்டி நீங்கள் ஆசைப்பட்ட பணி என்பதால் கிடைக்கும் சந்தோஷம் தனி. இதையும் பணியில் ஹீரோஹோண்டா போல மைலேஜ் காட்டி முன்னேறுவது உங்கள் சமர்த்து, உங்களை உலகமே மனம் திறந்து பாராட்டவேண்டுமென்ற ஆசை அல்பன்லீபித்தனமானது.

27 வயதாகும் நீங்கள் திருமணம் பற்றி யோசித்தால் விரைவில் இந்த தடைகளை தாண்டிச் செல்லலாம்.

குடும்ப உறவுகளை அமைத்துக்கொண்டால் உங்களால் அலுவலக விஷயங்களை எளிதாக செய்துவிட முடியும். அப்புறம் இருக்கவே இருக்கிறது ரியாலிட்டி கிங்ஸில் அனல் தெறிக்கும் படங்கள். பார்த்து பன்னீர் தெளித்து மகிழுங்கள். இதோ சரஸ்வதி பூஜை. அடுத்து தீபாவளி. சந்தோஷமாக மஜா பண்ணுங்கள் சார்.

பயணம் ஒன்று போதாது என்ற நூலை வாசித்தேன். தீபன் என்பவரின் சுயசரிதை நூல். டைரிக் குறிப்பு என கொள்ளலாம். குறும்பட ஹீரோ போல இருக்கிறார் எழுத்தாளர். இயற்கை விவசாயம் செய்பவர், அது பற்றி அறிய இந்தியா முழுவதும் 22 ஆயிரம் கி.மீ. தூரம் பயணித்து இருக்கிறார். இவரை ல்தாக சைஆ இருக்கா என சில பெண்கள் இச்சையோடு நெருங்க, ஆள் பதறுகிறார். சேலம் டாக்டரிடம் போகவேண்டிய ஆள். ஒரு கட்டத்தில் பயண நூல் அதன் டிராக்கைவிட்டு விலகி விடுகிறது. பாடாவதியாக இழுக்கிறது. நூல் கிடைத்தால் வாசியுங்கள். நன்றி.

சந்திப்போம்.

ச.அன்பரசு
11. 101.2016

17

# நான் நேர்மையானவன்!

அன்புள்ள தோழர் அன்பரசுக்கு, வணக்கம்.

எனது வேலைகள், முயற்சி, வெற்றி பற்றி பாராட்டி எழுதியிருந்தீர்கள். அதற்கு நன்றி சொல்லிக்கொள்கிறேன். இப்படி யாரும் என்னை பாராட்டியதில்லை. வேறு நேரடியான மறைமுகமான உதவிகள் எதனையும் வேண்டாமல் பாராட்டுவதற்கு தனி மனசு தேவைதான்.

அரசு வேலையில் நேர்மை என்பது தேவைதான். அதற்காக நான் சகாயம் ஐஏஎஸ் போல தலைக்கு மேல் போர்டு தொங்கப்போட்டு வேலை செய்வதை வெறுக்கிறேன். வேலையை சரியாக செய்தால் போதுமானது. நான் இப்படித்தான் என்று காட்டிக்கொண்டு, அவர் சொல்ல வருவது என்ன?

உங்களைப் போன்ற ஊடக ஆட்களுக்கு எழுதுவதற்கு யாராவது ஒரு ஆள் வேண்டும். சும்மாயிருப்பவர்களை கூட உசுப்பேற்றி, விகடன் போல உருப்படாத விருதைக் கையில் கொடுத்து ஏதாவது செய்யவைப்பீர்கள். தன் வாழ்வில்

நேர்மையாக செயல்படும் ஆட்கள் நிறையப் பேர் இருக்கிறார்கள் என்பது ஊடக ஆட்களுக்கு தெரியவில்லையா என்ன? ஆனால் இதை நீங்கள் ஏற்கமாட்டீர்கள் என்று எனக்குத் தெரியும். எனக்கு அவரின் போர்டு செயல்பாட்டில் விருப்பமில்லை.

பத்தாவது படிக்கும் வயதிலிருந்து இன்றுவரை நீங்கள் படித்த பிடித்த நூல்களை பரிந்துரை செய்து வருகிறீர்கள். இந்த அன்புக்கு என்றும் என் நன்றிகளை உரித்தாக்குகிறேன். நலமாக இருக்கிறீர்கள் அல்லவா?

நன்றி!

அ.ராமமூர்த்தி

*15.10.2016*

18

# சுயநலமான போராட்டங்கள்!

புதிய போராட்டக்கார தோழருக்கு. வாழ்த்துகள்.

நவம்பர் மாதம் என்றாலே போராட்டமா என

தெரியவில்லை. தங்களது பணி பற்றி சொன்னீர்கள். இத்துறை பற்றி முத்தாரத்தில் கூட எழுதலாம். யோசனை இருக்கிறது. பார்ப்போம். அரசு அதிகாரத்திற்கு எதிராக குரல் எழுப்பி காங்கேயத்தின் சேகுவேரா ஆகிவிட்டீர்கள். போராட்டங்கள் தொழிலாளர்களின் வேலை நேரத்தை முறைப்படுத்தியது. அவர்களுக்கான உரிமைகளை பெற்றுத் தந்தது உண்மைதான். ஆனால் இன்றைய காலத்தில் போராட்டங்களின் மூலமே அரசியல் தலைவர்களாகி இருப்பவர்கள் அதனை நாசூக்காக நசுக்கும் தந்திரங்களை கற்றவர்களாக இருக்கிறார்கள்.

எனக்கு இந்த போராட்டங்களில் எந்தவித ஆர்வம் கிடையாது. இவை இன்று சுயநலனிற்கான தனிப்பட்ட ஒருவரை முன்னிறுத்துவதற்கான வாய்ப்பை வழங்குகிறது. சரி விடுங்கள். நீங்கள் உங்கள் ஊழியர்கள் சங்கம் மூலமாக உரிமைகளை பெற, சலுகைகளை பெற போராடித்தான் ஆகவேண்டும். சில விஷயங்களை அரசின் கவனத்திற்கு கொண்டு செல்ல இதெல்லாம் தேவைதான். எனக்கும் போராட்டங்களைப் பற்றிய திரைப்பட காட்சிகளைப் பார்த்தாலே கொட்டாவி வருகிறது. பிரதமர் மோடியின் காலத்தில் எந்த போராட்ட மு ம் இருக்காது. அத்தனையும்

தந்திரங்களைக் கடைபிடித்து உடைத்து எறிந்துவிடுவார்கள்.

வாசிப்பு பற்றி பேசுவோம். இணைப்பிதழ் ஆசிரியர் கே.என்.சிவராமன் அவர்கள் குழும இதழ்களில் நான்கு தொடர்களை எழுதி வருகிறார். அத்தனையையும் எப்படி நினைவு வைத்து எழுதுகிறாரோ ஆச்சரியமாக இருக்கிறது. தீவிரமாக ஆங்கில, தமிழ் நூல்களையும வாசித்து வருபவர். அவரின் உழைப்பு எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. அவரின் நூல்கள், கட்டுரை பிடித்திருந்தால் அவருக்கு மின்னஞ்சலில் எழுதி அனுப்பிவிடுவேன். நேரடியாக பேசுவது கடினம். ஏதாவது உளறி வைப்பதே என் வழக்கம். எங்காவது போய்விட்டு வரவேண்டும். மனம் என்னமோ போல் இருக்கிறது. பார்ப்போம்.

*நன்றி!*

*ச.அன்பரசு*
*10.11.2016*

## 19
# வாசிப்பும் வாழ்க்கையும்!

இனிய தோழர் அ.ராமமூர்த்திக்கு, வணக்கம். நலமாக இருக்கிறீர்களா?

இதழ் ஆசிரியர் வயிற்றிலுள்ள பிரச்னை காரணமாக அறுவை சிகிச்சை செய்துகொண்டு விடுப்பில் இருக்கிறார். இதனால் தற்காலிக
முதன்மை ஆசிரியர் பொறுப்பை பொறுப்பாசிரியர் ஏற்றிருக்கிறார். அவருக்கு ஆபீசில் ப ண ம் கடன் வாங்கவும், படம் பார்க்கச் செல்வதுமே தெரியும். வார இதழ் ஃபார்ம் பற்றி புரிபடவே அவருக்கு சில நாட்கள் தேவைப்பட்டன. அவர் எதிர்பார்க்கும் தரத்திற்கு விகடன் ஆட்கள் மட்டுமே எழுத மு டி யு ம் . அவரின் வசைபாடலால் அனைவரும தடுமாறி மன அழுத்தத்திற்கு உள்ளாகி வருகின்றனர்.

வாசிப்பதையும் வாழ்க்கையையும் போட்டுக் குழப்பிக்கொள்ளக் கூடாது. ஓஷோ நூலில் உள்ள விஷயங்கள் மனதிற்கானவை. அவற்றை விட மேலானவற்றை உங்களுக்கு மக்கள் கற்றுத் தருவார்கள். நூலைப் படித்துவிட்டு நிகழ்காலத்தோடு துண்டிக்கப்பட்டு விடக்கூடாது. பல்வேறு பொறுப்புகளை நாம் விரும்பி ஏற்கவில்லை. அவை சரியான காலத்தில் நமது தோளில் ஏற்றப்படும். அதை வைத்துக்கொண்டு ஓடுவதும். நடப்பதும் நமது இஷ்டம்.

நண்பர்களிடமும் பகிர முடியாத தனித்துயர், பிரச்னைகள் நம் அனைவரிடமும் உண்டு. மழையோடு மழையாக அழுது தீர்த்துவிட்டு செயலாற்றுவதே சிறந்த வழி. நமக்கே நமக்கென சிறிது நேரத்தை ஒதுக்கி சும்மாவேனும் உட்கார்ந்திருக்கலாம். எந்த மேலாண்மை நூலை படித்தாலும் உங்களை முழுமையாக ஒழுங்கு செய்துகொள்ள முடியாது,. காரணம், அதனை மேற்கொள்ளவேண்டியது நீங்கள்தானே. பிறர் சொன்னாலும் செய்யவேண்டியது நீங்கள்தான்.

கசக்கினாலும், கறை படிந்தாலும் கரன்சி தாளின் மதிப்பு குறையாது. மதிப்புகள் வீழ்த்தப்பட்ட காலம் இது. அனைத்தும் பணம், சம்பாதிக்கும் திறன் ஆகியவற்றால் அளவிடப்படுகிறது. காலம் மாறக்கூடும். பார்ப்போம்.

நன்றி சந்திப்போம்

ச.அன்பரசு
18.11.2016

# 20
# சமூகப்பார்வை வேறு வேறு!

## *இனிய தோழர் அன்பரசுக்கு, வணக்கம்.*

*நீங்கள் படிக்கும் பல்வேறு பார்ப்பன பத்திரிகைகள் காரணமாக நீங்கள் அவர்களின் சிந்தனைகளுக்கு உள்ளாகி விட்டீர்கள். நீங்கள் தங்கியிருக்கும் இடமும் மயிலாப்பூர், கே.கே.நகர், திருவல்லிக்கேணி என செல்வ வளம் நிறைந்த பார்ப்பனர்களின் பகுதி. எனவே நீங்கள் சமூகத்தைப் பாரக்கும் பார்வை வேறு. ஒவ்வொரு முறையும் சாதியால் வாய்ப்புகள் மறுக்கப்படும் நிலையில் உள்ள என பார்வை வேறு.*

போராட்டங்களை இயல்பாகவே விகடன், குமுதம், துக்ளக் போன்ற பார்ப்பன ஊடகங்கள் அவதூறு செய்வது வழக்கம். தங்களது நிலையை சமப் படுத்திக்கொள்ள உள்ளுக்குள் சில இடதுசாரி ஆட்களை வைத்து சில கட்டுரைகளை எழுத சொல்லுவார்கள். ஆனால் வலதுசாரி மக்கள் விரோத கட்டுரைகள் வெளியான அடுத்த வாரமே மக்கள் நலன்மேல் அக்கறையானது போன்ற பாசாங்கு கட்டுரைகள் வெளியாகும். இவற்றை விகடன் மிக தந்திரமாக செய்யும். காரணம், அவர்களின் வர்க்கம்தான். தான்தான் அனைத்து மக்களுக்கும் நீதி வழங்கக் கூடியவனாக இருக்கிறேன் என்று நினைக்கும் அகங்காரம்தான் இதற்குக் காரணம்.

இந்தியா மட்டுமல்ல உலகம் முழுக்கவே போராடாமல் என்ன விஷயங்கள் கிடைத்திருக்கின்றன? வேலைநேரம், விடுமுறை போன்றவை போராடித்தான் கிடைத்துள்ளன. இல்லையெனில் ஞாயிற்றுக்கிழமையும் கூட வேலை நாளாகவே இருந்திருக்கும். எங்களுக்கான சலுகைகளை நாங்கள் போராடித்தான் அடையவேண்டும். எங்கள் புள்ளியியல் துறையின் தகவல்களை வைத்துக்கொண்டுதான் மத்திய அரசு விவசாயத்துறை சார்ந்த நிதி ஒதுக்கீடுகளை செய்கிறது. பயிர்காப்பீடு திட்டத்தை அமல்செய்வதும் இதன்படிதான். ஆனால் அரசு எங்களுக்கு வழங்கவேண்டிய ஊதிய நிலுவைகளை சரியாக வழங்குவதில்லை.

துறையிலுள்ள சிலர் வேளாண்துறையோடு இணைந்து ஊழலில் ஈடுபடுகிறார்கள் என்பது உண்மைதான். அதற்கான விளைவை அவர்களே அனுபவிப்பார்கள். நான் இதற்காக அனைவரும் இணைந்து போராடும் போராட்டத்தை புறக்கணிக்கப் போவதில்லை. அமைப்பாக திரளாதபோது அடிப்படை உரிமைகளை மெல்ல இழக்க நேரிடும். இப்போது நாங்கள் செய்யும் பல்வேறு ஆய்வுகளை தனியார்

நிறுவனங்களுக்கு மத்திய அரசு வழங்கி வருகிறது. இத்துறை இயக்குநரான, புகழ் பெற்ற எழுத்தாளரான ஐ.ஏ.எஸ் அதிகாரி இதுபற்றி வாயே திறப்பதில்லை. வெளியில் கேட்டால் ஏராளமான செயல்பாடுகளை செய்தவர் என்பார்கள். ஆனால் இத்துறையில் என்ன பிரச்னையோ, தன் பணியை காப்பாற்றிக்கொள்வதில் கவனமாக இருக்கிறார்.

இப்போது இதழை உங்கள் விருப்பப்படி நடத்துவதற்கு உங்களுக்கு சுதந்திரம் கிடைத்திருக்கும். ஜமாயுங்கள். என்னென்ன விஷயங்களை செய்ய முடியுமோ செய்துவிடுங்கள். அப்புறம் வாய்ப்பு கிடைக்குமோ என்னவோ? படிப்பதிலும் அதனை செயல்படுத்துவதிலும் நிறைய முறை மூர்க்கமாகவே நடந்துகொண்டுள்ளேன். அது என்னுடைய பாணி. நீங்கள் நிறைய முறை எடுத்துச் சொல்லியிருக்கிறீர்கள். நான் எதையும் காதில் போட்டுக்கொண்டதில்லை. பல அடிகள் பட்டபிறகு நான் நிறைய விஷயங்களை மாற்றிக்கொண்டுள்ளேன். ஓஷோ விஷயங்களும் அப்படித்தான். அதனை வாழ்வின் பல்வேறு நிலைகளில் படித்துக்கொண்டே இருக்கவேண்டும் என நினைக்கிறேன். பார்ப்போம்.

உடலை பார்த்துக்கொள்ளுங்கள். நன்றி!

அ.ராமமூர்த்தி

*22.11.2016*

# 2017

21

## புரட்சிகர செல்ஃபீ!

இனிய தோழர் ராமமூர்த்திக்கு, வணக்கம்.

நலம்தானே?

ஊதியம் சார்ந்த பஞ்சாயத்து இருப்பதாக சொன்னீர்கள். இப்போது சென்னைக்கு வருவதாக அலைபேசியில் சொன்னது போராட்டத்திற்காகத்தானா? புரட்சிகரமான செல்ஃபீகளை நீங்களும் உங்களது சக நண்பர்களும் எடுத்து சமூக வலைத்தளங்களில் பதிவிடும் வரலாற்று பேறு கிடைத்திருக்கிறது. பயன்படுத்திக்கொள்ளுங்கள்.

ஆழ்வார்பேட்டை ஆண்டவரே போராட்டங்களுக்கு நான் ரசிகன் என்று சொல்லியிருக்கிறார். அவரின் தாசரான நீங்கள் ஏதாவது கருத்துச்சொல்லி பேசுவது எவ்வளவு முக்கியம் தெரியுமா? மக்கள் கருத்து என்ன, மகேஸ்வரி ஒப்பீனியன் என்ன என்று நிறையபேரிடம் நாம் கேட்கலாம். நம்மிடம் பிறர் கேட்டால் எப்படி? நடிகர் பார்த்திபனை மனதில் செபித்தபடியே பேசினேன். நண்பர்கள் மிரண்டு ஓடிவிட்டனர்.

என்னமோ இப்போது ஆபாச படங்கள் அலுப்பை ஏற்படுத்துகின்றன. உலக சினிமா பார்க்கும் நண்பர்களின் தொடர்பு ஏற்படுத்திய பாதிப்பா? என்று தெரியவில்லை. நிறைய விஷயங்கள் அப்படி இருக்கலாமோ என்று தோன்றுகிறது. எடுத்த

படத்தை ரசிக்க முடியாமல் இப்படியாகிவிட்டது நிலைமை. பஸ்டே கொண்டாட்டம்தான் போலீசுக்கு கல்லூரி மாணவர்களின் மீது கோபம் ஏற்படுவதற்கான தற்போதைய காரணமாக உள்ளது. இச்செயலை தமிழகத்தின் தனிச்சிறப்பு என்று சிலர் பெருமை வேறு பேசுகின்றனர். அரசியல் கட்சிகளின் செல்வாக்கினால் மாணவர்கள் மீது காவல்துறை நடவடிக்கையும் எடுப்பதில்லை. தற்போது நீதிமன்றம் வரை விவகாரம் சென்றுவிட்டது.

மாணவர்கள் விவகாரத்தில் உடலில் அபரிமிதமாக சேரும் சக்தியும், தன்னை சிறப்பாக எண்ணிக்கொள்ளும் தன்மையும்தான் ஆபத்திற்கு காரணம். அவர்களுக்கு ஓராண்டு மட்டும் ராணுவ பயிற்சி அல்லது அரசு சார்ந்து பணிகள் ஒன்றை செய்து வர பணிக்கவேண்டும். விளையாட்டு மைதானங்கள் அனைத்தும் அம்மா உணவகங்கள், தனியார் குடியிருப்புகள் என காணாமல் போய்க்கொண்டேயிருக்கின்றன. அப்புறம் எப்படி நிலைமை மாறும் என அரசு நினைக்கிறது?

மத்திய அரசின் சீர்திருத்த பட்டியலில் காந்தியும் இருக்கிறார் என்று தகவல் கசிந்துள்ளது. ரூபாயில் அவரையும் நீக்கிவிட்டு சுழற்சி முறையில் பல்வேறு தலைவர்களை அச்சிட்டு வழங்கும் சிந்தனையும்

அரசுக்கு இருக்கிறது. இது கலவரத்தைத்தான் ஏற்படுத்தும் என நினைக்கிறேன். நம் வாழ்நாளுக்குள் தீரன் சின்னமலை, முத்துராமலிங்க தேவர் ஆகியோருக்கு ரூபாய் நோட்டில் இடம் கிடைப்பதைப் பார்க்கும் பாக்கியமும் கிடைக்கலாம்.

காதி உடையின் மீது எனக்கு ஈடுபாடு உண்டு. பிரதமர் மோடி அதனை அணியச்சொன்னதற்காக அல்ல. காதி என்ற நிறுவனம் எப்படி தொடங்கப்பட்டது, அந்த நிறுவனத்தின் தேவை பற்றி வாசித்து அறிந்ததால். அவர்களிடம் தைத்து விற்கப்படும் பொருட்கள் சரியில்லை. தனியாக துணி வாங்கி நம் பாணியில் தைத்துக்கொண்டால் நன்றாக இருக்கும். இல்லையெனில் ஃபேப் இந்தியா போன்ற நிறுவனங்களுடன் கைகோத்து செயல்படலாம். இதற்கெல்லாம் அரசுக்கு மனம் வரவேண்டுமே?

*நன்றி!*

*சந்திப்போம்*

*ச.அன்பரசு*

*23.1.2017*

22

# இந்துத்துவமும் வணிகமும்!

*இனிய நண்பரே, வணக்கம். எப்படி இருக்கிறீர்கள்.*

*நலமாக இருக்கிறீர்கள் என நம்புகிறேன். நவதாராளமய பிரச்னைகளை உலகம் சந்திப்பதைப் போலவே சென்னை நிறைய விஷயங்களை எப்படியே சமாளித்து வெளியே வந்திருக்கிறது. இயற்கை ஒரு பக்கம் என்றால், பிரதமர் மோடி மறுபக்கம் நின்று பிரச்னைகளை ஏற்படுத்துகிறார்.*

நற்பணி நடிகரின் பேட்டியைத் தவிர இந்த ஆண்டு தமிழர்களுக்கு பெரிய பாதிப்பு ஏற்படவில்லை..

நீங்கள் வாசிப்பதற்கு புதிய புத்தகங்கள் ஏதேனும் வாங்கினீர்களா? கடவுள் சந்தை — மீரா நந்தா என்ற நூலை படித்து வருகிறேன். இதனை ஆசிரியரே படிக்கக் கொடுத்தார். உலகமயமாக்கம் எப்படி இந்தியாவை மாற்றுகிறது, குறிப்பாக இந்துமயப்படுத்தி வணிகத்தை நடத்திக்கொள்வதை ஏராளமான ஆதாரங்களை முன்வைத்து பேசியிருக்கிற நூல் இது. நான் இந்த நூலை புரட்டிப் பார்த்துக்கொண்டிருக்கும்போது நண்பர் வெங்கடசாமி குமுதம் புகழ் வெண்பா கீதாயனின் ஸ்லீவ்லெஸ் போட்டோவை நெட்டில் வெறித்துப் பார்த்துக்கொண்டிருக்கிறார். ஒவ்வொருக்குமான தேவை வேற சார் என்று பிலாசபி சொல்லிவிட்டு சிரிக்கிறார்.

பெண் செய்தியாளர்களுக்கான முதல் தகுதி ஆண்களின் இடுப்புக்கு கீழே கிளர்ச்சி ஏற்படுத்துவதுதானா? இதைப்பற்றி பேசும்போது இதுபோல உடை அணிந்த பெண்களை மூத்த செய்தியாளர் B***** சொல்லித் திட்டிவிட்டு இப்படியெல்லாம் ஆபீசுக்கு வந்தாத்தானே சம்பளம் ஜிவ்வுனு ஏறும் என்றார். இந்தியா — சீனா பற்றிய

போர் நூல் ஒன்றைப் படித்து வருகிறேன். மொழி தகவல்களை சொல்லுவது மட்டுமே என்று கருதினால் கூட கடுமையாக இருக்கிறது.

நன்றி!

சந்திப்போம்

ச.அன்பரசு
29.1.2017

## 23
## நோக்கம் முக்கியம்!

அன்புள்ள அன்பரசுவுக்கு, நன்றாக இருக்கிறீர்களா?

உங்களுக்கு பொதுவாகவே போராட்டங்கள் பிடிக்காது என்று நினைக்கிறேன். அதனால்தான் சம்பளம் கேட்டு துறைசார்ந்த உரிமைகள் கேட்டு ஊழியர்கள் போராடும்போதெல்லாம் அவர்களை இழிவாக பேசுகிறீர்கள். இன்று நீங்களும் நானும் எட்டு மணிநேரம் வேலை பார்க்கிறோம் அல்லவா? இதனைக்கூட நாம் போராடித்தான் பெற்றோம்.

இப்போது இருக்கும் நிலைமை போராட்டங்களுக்கு சாதகமாக இல்லை என்பது உண்மைதான்.

அறவழியில் எங்களது ஊழியர்கள் தங்கள் கோரிக்கைகளை எப்படி சொல்வது? அதற்கு வேறுவழி இருந்தால் தாங்கள் கூறலாமே? மக்களுக்கு பாதிப்பில்லாத வகையில் போராட்டம் நடத்துவது என்றால் ஞாயிற்றுக்கிழமைதான் போராட்டத்தை நடத்தவேண்டும். இப்படி பேசவும் நீங்கள் தயங்கமாட்டீர்கள்.

அதிகாரத்தை நோக்கிய ஈர்ப்பு, நேசம்தான் உங்களை இப்படி பேசவைக்கிறத. எளிய மனிதர்கள் இந்த அதிகாரத்தை வாக்ககுரிமை மூலம் தந்தார்கள் என்பதை மறந்துவிடாதீர்கள். தங்களை மதிக்காத தலைவர்களை பின்னாளில் இதே மக்கள் தூக்கியெறிந்து இருக்கிறார்கள். உடை மாதிரியான விஷயங்களில் யாரும் குறிப்பிட்ட கருத்தைக் கொண்டிருப்பார்களா என்று தெரியவில்லை. பருத்தித்துணி உடலுக்கு நல்லதுதான். ஆனால் விலை அதிகம் என்பதால்தான் செயற்கை துணிகள் வெற்றி பெற்றன. இவற்றைத் துவைப்பதும் எளிது. பிரதமரே சொன்னாலும் இதைப்பற்றி யாரும் கவலைப்படப் போவதில்லை. நம் பாக்கெட்டில் இருக்கும் காசு தான் எந்த துணியை வாங்கப்போகிறோம் என்பதை முடிவு செய்யும்.

நீங்கள் பேசுவது வலதுசாரித்துவத்தை ஆதரித்து

என்று புரிகிறது. ஆனால் வாசிக்கும் நூல்கள் அனைத்தும் அதற்கு எதிர்ப்பான நூல்களாகவே இருக்கிறது. உண்மையில் உங்களுக்குள் எத்தனை வலதுசாரிகள், இடதுசாரிகள் இருக்கிறார்கள் என்று ஒன்றுமே புரியவில்லை. பெண்கள் இயல்பாகவே தங்களை அலங்கரிக்க ஆர்வப்படுவார்கள். அதற்காக அவர்களை பாலுறவுக்கு மட்டும் என்று நினைத்து உங்களது பொறுப்பாசிரியர் போல பேசுவது அவரது மனதிலுள்ள பிரச்னையைக் காட்டுகிறது.

உடலை சந்தைப்படுத்துவது என்பது சாதாரணமான விஷயம் அல்ல. சில பெண்கள் அதனை முதலீடாக்கி வெல்கின்றனர் என்பது உண்மைதான். ஆனால் நாளிதழ்களில் அதனை செய்வது கடினம். டிவியில் அதனை செய்யலாம். பெண்களின் திறமையோடு மோதலாம். ஆனால் அவர்களை இப்படி கொச்சைப்படுத்தி பேசுவது தவறு என்பது எனது அபிப்பிராயம்.

தற்போது மாநில சுயாட்சி நூலை படித்து வருகிறேன். ஒரு முறை முழுக்க படித்தாலும் திரும்ப படிக்கலாம் என்று தோன்றுகிறது. காலம்தோறும் சில கருத்துகள் மாறலாம். ஆனால் நம் அடிப்படை மாறக்கூடாது எனபதை கவனத்தில் கொள்ளுங்கள் நண்பரே. எந்த நிறுவனத்திலும் நிறுவனர் குசு

*விட்டாலும் மணக்கிறது என்று சொல்ல ஒரு கூட்டமே இருக்கிறது என்பார்கள். அப்படி சொல்லி முன்னேற்றம் பெறுவது மனசாட்சிக்கு விரோதமானது. நிறைய நூல்களை வாசியுங்கள் நன்றி !*

*அ.ராமமூர்த்தி*

*2.2.2017*

24

# தலைவன் எங்கே இருக்கிறான்?

இனிய தோழர் ராமமூர்த்திக்கு, வணக்கம்.

தொழிற்சங்கம், போராட்டம் பற்றிய உங்களது பேச்சுகள் காலத்தின் கட்டாயம். ஆனால் இதற்கு என்ன பயன் இருக்கப் போகிறது என்று தெரியவில்லை. காவிக்கட்சி ஆட்சியில் சங்கம், கருத்துக்கூறுவது, உரிமைகளைப் பேசுவது என அனைத்துமே தேச துரோகம். நீங்கள் அரசு பதவியில் இருந்தாலும் தொழிறசங்க நடவடிக்கைகளில் தீவிரமாக இறங்கி வருகிறீர்கள்.

வைப்ரேஷன் மோடில் அனைவரையும் இயக்கி கொண்டு வருவது பெரிய விஷயம்தான். இங்கு அனைவருமே காத்திருப்பது தொண்டர்களாக அணிதிரள்வதற்குத்தான். தலைவராக முன்னே அவர்களை நடத்திச்செல்ல யாராவது வேறு மாநிலங்களில் அல்லது நாட்டில்தான் ஆட்களைப் பிடிக்கவேண்டும்.

சித்தாந்தரீதியில் நீங்கள் தயாராவது

போராட்டங்களுக்கு முக்கியமானது. உங்கள் துறைசார்ந்த ஊழியர்களைப் பார்த்தால் எதையும் முனைப்புடன் போராடிப் பெறுபவர்கள் போல தோன்றவில்லை. உங்கள் போராட்டம் வெற்றிபெற்று நின்றுபோன சம்பளத்தொகைகளைப் பெற வாழ்த்துகிறேன். மக்களிடம் நெருக்கமாக இருக்கச் செய்யும் கள அனுபவங்களே உங்களை சரியான இடத்தில் இருத்தும்.

இனி வரும் காலம் முழுவதும் சூழலுக்கு எதிரான அரசின் பல்வேறு நடவடிக்கைகளை மக்கள் எதிர்க்கும் விதமாகவே இருக்கும். வளர்ச்சி வேகத்தில் அரசுக்கு இருக்கும் நெருக்கடி நம்மை இச்சூழலுக்குள் தள்ளலாம். விவசாயத்தையும் தொழிலாக பாவித்து அதற்கும் வரி விதிக்க இந்திய அரசுக்கு நிதிஆயோக் குழு பரிந்துரைக்க உள்ளது. இதில் சம்பாதிப்பவர்களும் உண்டே. அவர்கள் பணம் கட்டட்டும் என்கிறது அரசு. ஏழை விவசாயிகளுக்கு இதில் விலக்கு என்பது பசப்பலாகவே தெரிகிறது.

மத்திய அரசுக்கு வாக்கு பெறும் சமயங்களில் மக்களை நினைப்பதேயில்லை. அதிகாரத்தை எப்படியேனும் பெற்றால் போதும் என்ற சூழ்ச்சியை பின்பற்றுகிறார்கள். இதனால் பெரும்பாலான

இடங்களில் காவிக்கட்சி ஆட்சியில் அமரும். அதை நீங்களும் நானும் பார்க்கத்தானே போகிறோம்.

*நன்றி!*

*சந்திப்போம்*

*ச.அன்பரசு*
*1.5.2017*

25

# மக்கள் மனதிலிருந்து மாற்றம் தொடங்கும்!

*அன்புள்ள நண்பர் அன்பரசுவுக்கு, நலமா?*

*நீங்கள் டீக்கடைக்காரரர் ஆட்சிக்கு வருவதை ஆதரித்து என்னிடம் ஒருமுறை பேசினீர்கள். அன்று நான் அவரின் குஜராத் வரலாறு பற்றி பேசியது எதையும் அன்று நீங்கள் காதுகொடுத்துக் கூட கேட்கவில்லை. ஆனால் இன்று உங்கள் வலைத்தளத்தில் அவரைப்பற்றி நிறைய எதிர்ப்பான எழுத்துகளைப் பார்க்கிறேன். இந்த கடிதங்களிலும் அவரது ஆட்சியைப் பற்றி நிறைய எழுதிவிட்டீர்கள். என்ன நீங்கள் என்னிடம் பேசிவிட்டு அதை சுருக்கமாக எழுதுவீர்கள். நான் உங்களிடம் இதுபற்றி வெளிப்படையாக புலம்புவேன்.*

என்ன செய்யமுடியும் இந்தியாவில்? ஒருவர் ஓட்டுப்போட்டுவிட்டால் அதற்குப்பிறகு அவர்களுக்கு நடக்கும் அரசில் எந்த பங்கும் கிடையாது. எதுவும் செய்ய முடியாது. நடக்கும் விஷயங்களை தந்தி பேப்பர் வாங்கி படித்துவிட்டு அமைதியாக தினசரி வாழ்க்கையைப் பார்க்கவேண்டியதுதான். நம் வாழ்க்கை அப்படித்தான் அமைக்கப்பட்டிருக்கிறது.

அநீதிக்கு எதிராக குறிப்பிட்ட அரசியல் கட்சிகள், அல்லது சிறு குழு போராடும் என நினைத்துக்கொண்டு மக்கள் இருந்தால் அவர்கள்தான் முட்டாள்கள் என்பேன். அவர்களுக்கு அநீதி இழைக்கப்பட்டால், அதை அவர்கள்தான் தட்டிக் கேட்கவேண்டும். இதற்கென தனியாக சூட் தைத்துப் போட்டுக்கொண்டு சூப்பர் ஹீரோக்கள் வானிலிருந்து இறங்குவார்களா என்ன?

அனைத்தையும் ஏற்றுக்கொண்டு மக்கள் இருந்தால் அவர்கள் ஏதோ மனக்குறைபாட்டு நோயுடன் வாழ்கிறார்கள் என்று அர்த்தம். எந்த விஷயத்தை அரசு சொன்னாலும அப்படியே ஏற்றுக்கொண்டால் மூளை என்ற ஒன்று எதற்கு? யோசிக்க வேண்டாமா?

எங்கள் துறைசார்ந்த வேலைகளைக்கூட அரசு

தனியாருக்குத்தான் வழங்குகிறது. பணியிடங்களை நிறைய குறைத்து வருகிறார்கள். இதற்கான போராட்டத்திற்கு உங்களைப் போன்ற ஊடகவியலாளர்கள் எந்த ஆதரவும் தருவதில்லை. சமூகவலைத்தளங்களில் நடிகைகளில் கவர்ச்சிப் போட்டோக்களை பிரசுரிக்கவும், கிசுகிசுக்களை எழுதவும் மெனக்கெடுகிறீர்கள். ஆனால் மக்கள் பிரச்னைகளைப் பற்றி கவலையில்லை. பாருங்கள் நாம் இருவரும் இதைப்பற்றி பேசிப் புலம்பி இதய நோயாளிகள் ஆவதுதான் மிஞ்சும். சரி, பார்ப்போம்

*அ.ராமமூர்த்தி*
*10.5.2017*

26

# இடதுசாரியா, வலதுசாரியா?

இனிய நண்பர் ராமமூர்த்திக்கு, வணக்கம்.

முன்பு என்னை இடதுசாரி என்று கூறினீர்கள். இன்று உங்கள் சம்பளம் உயரவேண்டும் என்பதற்காக சிவப்புக்கொடியை ஏந்தியுள்ளீர்கள்.

காலத்தின் கோலம் இது. நான்சி பிரைடே படித்து நெகிழ்ந்து இன்பம் சுகித்த ஆள் நீங்கள். இன்று செஞ்சதுக்கம், உரிமை, தியாகம் பற்றி பேசும் நிலை.

தினசரி அறைக்கு நீர் போட்டுவிட மன்னரைப் பார்த்து பரிசில் பெற காத்திருக்கும் புலவர் போல காத்திருந்து நிற்கிறோம். பிறகுதான், வீட்டு ஓனரிடம் நீரை வாங்கி வருகிறோம், புலவரிடம் ஏடுகள் இருக்கும். எங்களிடம் குடங்களும் பக்கெட்டுகளும் இருக்கின்றன. நான் அடுத்தமுறை ஊருக்கு வந்தால் உங்கள் வீட்டுக்கு வர முயல்கிறேன்.

உங்கள் ஊர் மிகவும் தூ ர மா க அமைந்துள்ளது. சேலத்தில் இறங்கி நாமக்கல் பஸ் பிடித்து வருவது என்பது எனக்கு கனவு போலவே படுகிறது. உங்களுக்கு வாய்ப்பிருந்தால் கொடுமுடி வரலாம். எனக்கு பக்கம் என்றாலும் உங்களுக்குத் தூரம். உங்களது புத்தகங்களை எ ன் வீட்டில் கொ டு த்து ள் ளே ன் . தாமரைப்பாளையம் வந்தால் வாங்கிக்கொள்ளுங்கள். எனது கையால் நூல்களைப் பெற விரும்பினால் அதற்குள் நூல்மீது சிலந்திகள் வலைகட்டிவிடும் வாய்ப்புகள் இருக்கிறது.

மகாபாரத காவியத்தை ஏதேனும் வழியில் புனைவாக, திரைப்படமாக பார்த்திருப்பீர்கள். நான் கன்னட எழுத்தாளர் பைரப்பாவின் எழுத்தில்

படித்தேன். புராண புருஷர்கள் மிகவும் இயல்பான மனிதர்களாக கதாபாத்திரங்களாக இருக்கிறார்கள். பல்லாண்டுகளாக ஆராய்ச்சி செய்து நூலை எழுதியிருக்கிறார் போல.

தத்துவம், உளவியல் சார்ந்த பார்வைகள் அதிகம். நிறைய இடங்கள் ரசிக்கும் வண்ணம் எழுதப்பட்டுள்ளது. போரில் துரியோதனன் தோற்றுப்போகும் காட்சியில் காட்சிகள் முன்பின்னாக நகர்கின்றன. இவை வாசிப்பாளர்களை சோர்வுறச்செய்கின்றன. சோர்வுறாமல் படிப்பது கஷ்டம். படித்துவிட்டால் முக்கியமான கிளாசிக் நாவல் என்று உணர்ந்துகொள்வீர்கள்.

*நன்றி!*

*சந்திப்போம்!*

*ச.அன்பரசு*
*15.6.2017*

அன்புத் தோழருக்கு வணக்கம். நன்றாக இருக்கிறீர்களா?

தங்களுடைய பணி பரபரப்பானது. என்னுடைய பிஎஸ்என்எல் அலைபேசி எண்ணை யாருமே தொடர்புகொள்ள முடியாத நிலை உள்ளது. நான் முடிந்தவரை உங்களை ஞாயிறு தொடர்புகொள்வது அதனால்தான். இருவருமே எந்த பரபரப்புமின்றி பேச முடியும் என்று நினைக்கிறேன்.

நகரில் நமக்கு நாமே நேருக்கு நேராக அமர்ந்து உரையாடுவது போல அடிக்கடி தோன்றுகிறது. இனி நாம் நினைத்தாலும் நமக்கு தோள் மீது ஏறியுள்ள சுமைகள் நம்மை சும்மா விடாது. நேரம் ஒதுக்கி அதில் தான் நாம் பேசிக்கொள்ள முடியும். நிலைமை காலந்தோறும் மாறி வருகிறது. எனது எழுத்து வேலைகள் முடிந்த ஞாயிறு இரவில் இக்கடிதத்தை
எழுதி வருகிறேன்.

புயலிலே தோணி நாவலைப் படித்திருக்கிறீர்களா? அந்நாவலை எழுதிய
ப. சிங்காரம் பற்றிய கட்டுரை ஒன்றை படித்துக் கொண்டிருக்கிறேன். நீங்கள் அண்மையில் ஏதாவது வாசித்தீர்களா? நேரம் கிடைத்தால் வாசியுங்கள். இந்திமொழி போராட்டம் பற்றி ஆர். முத்துக்குமார்

எழுதிய மின்னூல் ஒன்றை தரவிறக்கினேன். படித்து வருகிறேன்.

அரசின் கட்டுப்பாடுகள் எப்போதும் போல பிறரை அடக்குவதாகவே இருக்கிறது. கையும், தாமரையும் என்பதுதான் மாறுகிறதே ஒழிய செயல்பாடுகள் மாறவில்லை. அதிகார அமைப்புகளின் இயல்பே இப்படித்தானோ?

நன்றி!

சந்திப்போம்

ச.அன்பரசு
19.6.2017

## 28
## பேசுவதையே விரும்புகிறேன்!

அன்புள்ள அன்பரசுக்கு, வணக்கம்.

நீங்களும் நானும் கருத்திபாளையத்தில் புதிய கலாசாரம் இதழை வாசித்தது நினைவுக்கு வருகிறது. இளமையில் நாம் செய்யும் பல்வேறு விஷயங்கள்

மிகத்துல்லியமாக இருக்கவேண்டும் என்று அவசியமில்லை. ஆனால் அடிப்படையான மனிதநேயம் என்பதில் இடறி கீழே விழுந்துவிடக்கூடாது. நான் சொல்ல வருவது இதுதான்.

நீங்கள் பத்திரிகையில் இருக்கிறீர்கள். நான் அரசு பணியாளராக இருக்கிறேன். நாம் பணியை உணர்ந்து கவனமாக செய்யவேண்டும். அந்த பணிக்கான வரையறைகள்தான் இங்கு முக்கியம். தனிப்பட்ட கருத்தியல், அரசியல் கருத்துகள் அவசியமில்லை. அவை வேலையைக் கெடுத்துவிடும். பாகுபாடு பார்க்க வழிவகுத்துவிடும்.

உண்மையில் உங்களோடு அலைபேசியில் பேசுவதையே நான் விரும்புகிறேன். உங்கள் பேச்சில் இருக்கும் நக்கல் எழுத்தில் ஏன் வருவதில்லை என்று தெரியவில்லை. சிலசமயம் அவற்றை எடிட் செய்து விடுகிறீர்கள் போல. உங்கள் இயல்பாக எதனையும் நறுக்கென நக்கல் செய்துவிடுவது நன்றாக கைகூடி வருகிறது. அதனை நீங்கள் எழுத்தில் கொண்டுவந்தால் வெல்வீர்கள் என்று தோன்றுகிறது. முயலுங்கள். நிறைய கட்டுரைகள் மிக தீவிரமான தொனியில் இருக்கின்றன. நான் அவற்றை விரும்பவில்லை.

ஏனெனில் நீங்கள் எழுத்தில் பல்வேறு நூல்களை எனக்கு வாசிக்க சொல்லி பேசியிருக்கிறீர்கள். உங்களுடைய எழுத்தை திரும்ப படித்துப் பார்த்தாலே உங்களுக்கு இந்த உண்மை புரியும். அடுத்தமுறை ஊருக்கு வந்தால சேலத்தில் இறங்கிவிடுங்கள். அங்கிருந்து நாமக்கல் ராசிபுரத்திற்கு பஸ் பிடித்தால் என்னை சந்திக்கலாம். நீங்கள் எங்கள் ஊருக்கு வந்தது இல்லை அல்லவா? ஒருமுறை வரலாம்.

புராணங்களுக்கு எதிரான மஞ்சை வசந்தன் போன்றோர் எழுதிய நூல்களைத்தான் படித்திருக்கிறேன். நீங்கள் கூறிய புராண சமாச்சாரங்களுக்கு நான் எதிரானவன். புராணங்களால் நாங்கள் ஒதுக்கப்படுகிறோம் என்பதால் எனக்கு நூல் பிரபலமாக இருந்தாலும் அதனைப் படிக்க ஆர்வம் இல்லை. பைரப்பா பற்றி நீங்கள் சொன்னது ஆர்வமூட்டுகிற தகவலாகத்தான் இருக்கிறது. இனி வரும் காலத்தில் புராணங்களிலிருந்து தனியாக குறிப்பிட்ட கதாபாத்திரத்தை எடுத்துக்கூட எழுதுவார்கள். புராணங்கள் எப்படி இருந்தாலும் இந்தியாவில் பரபரப்பாக விற்றுப்போகிறது. அப்புறம் என்ன கவலை? தமிழகத்தைப் பற்றி புரிந்துகொண்டால் மட்டுமே பிற மாநிலங்களை விட நாம் வளர்ச்சி

பெற்றுள்ளதற்கான காரணத்தை அறிந்துகொள்ள முடியும். அந்தவகையில் இந்தி மொழிக்கு எதிரான போராட்டம் பற்றி நீங்கள் வாசித்து வருவது மகிழ்ச்சி தருகிறது.

எனது பணிசார்ந்த விஷயங்கள் எப்போதும் போல மேலே உள்ளவர்களுக்கும் எனக்கும் சண்டைகளும் சிடுக்குகளுமாகவே செல்கிறது. கல்லூரிக்கான புராஜெக்ட் போல முன்னர் பணிசெய்தவர்களின் புள்ளிவிவரங்களை அப்படியே பதிந்து வைத்துவிடுகிறார்கள். இப்படித்தான் அன்றைய வேலை முடிந்தது என்று கையெழுத்து போட்டுவிட்டு அலுவலர்கள் வீட்டுக்குச் செல்கிறார்கள். நேர்மையாக பணியாற்ற எந்த விஷயம் இவர்களைத் தடுக்கிறது என்று எனக்கு இன்னும் புரியவில்லை. நான் அலைந்து திரிந்து கிடைக்கும் விவரங்களை பதிந்துதான் பணியாற்றுகிறேன். மனசாட்சிக்கு பயந்து நேர்மையாக வேலை செய்வது முக்கியம் என நினைக்கிறேன். பார்ப்போம். எங்கள் வீட்டில் அம்மா நலமாக இருக்கிறார். உங்கள் வீட்டிலும் எல்லோரும் நலம்தானே?

நன்றி!

அ.ராமமூர்த்தி

*22.6.2017*

## 29
# விடுமுறையும் திரைப்படமும்!

அன்புள்ள இனமானத் தோழர் ராமமூர்த்திக்கு, வணக்கம்.

எழுபதாவது சுதந்திர தின கொண்டாட்டத்தை இந்தியா கொண்டாடி வருகிறது. நமக்கு திரைப்படம்தானே விடுமுறையின் அடையாளம். இந்த சீசனில் போகன் படம் வந்திருக்கிறது. பத்திரிகையில் வெளியான பிரதமர் மோடியின் உரை படிக்க நன்றாக இருக்கிறது. நல்ல எழுத்தாளர்

குழு எழுதியிருக்கிறது. ஆனால் நடைமுறையில் பல விஷயங்கள் சாத்தியமில்லாதது போல படுகிறது. டைம்ஸ் ஆஃப் இந்தியாவில் சுதந்திர தின சிறப்பிதழ் அழகாக நிறைய தகவல்களோடு வந்துள்ளது.

முல்லை பெரியாறு — ஊரோடி செல்வக்குமார் எழுதிய நூலை படித்து வருகிறேன். பென்னிகுக் அணை கட்ட பட்ட கஷ்டங்கள், ஜனவரி 15 இல் அவருக்கு பொங்கல் வைப்பது, பென்னிகுக் என பிள்ளைகளுக்கு பெயர் சூட்டுவது என புகழ்மாலை விஷயங்களை வெட்டி வீசிவிட்டு நடந்த விஷயங்களைப் பற்றி நேர்த்தியாக பதிவு செய்கிற நூல் இது. பாதி படித்துவிட்டேன்.

நான் சிலமுறை உங்களைத் தொடர்பு கொள்ள நினைக்கும்போது நீங்கள் தொடர்பு எல்லைக்கு வெளியே போய் விடுகிறீர்கள். விடுமுறை தினங்களில் காதலுக்கு ஓவர்டைம் வேலை செய்கிறீர்களா? ஈரோடு புத்தகத் திருவிழாவில் புத்தகம் ஏதாவது வாங்கினீர்களா? நான் வேலை பளுவினால் இந்த ஆண்டு ஊருக்கு வரமுடியவில்லை.

நன்றி!

சந்திப்போம்

*ச. அன்பரசு*
*14.7.2017*

# 30
# ஆசிரியரின் மறுக்கமுடியாத பரிசு!

*அன்புள்ள தோழர் ராமமூர்த்திக்கு, வணக்கம்.*

*உங்கள் சம்பளத்தை ஜிஎஸ்டி வரி நீங்கலாக முழுமையாகப் பெறும் போராட்டத்தில் இருப்பீர்கள். உலகமே வேறுமாதிரி வருகிறது. முதலாளித்துவம் சார்ந்த வேகம் அதிகரித்து வருகிறது. தன் தேவைக்கு மீறிய அனைத்து விஷயங்களையும் பயன்படுத்தி வருகிறார்கள். இது எங்கே போய் முடியுமோ?*

*மத்திய அரசு ஊழியர்களுக்கு சம்பளத்தை ஏற்றிய பின்னரே, ஜிஎஸ்டி வரியை அமல்படுத்தியுள்ளது. எனவே உங்களுக்கு வரி பற்றி பிரச்னை இல்லை*

என்று நினைக்கிறேன். மூத்த குடிமக்களின் வைப்புநிதி வட்டி குறைக்கப்பட்டுள்ளது. 71 ஆண்டுகளுக்குப் பிறகு வரும் வரி சீர்த்திருத்தம் என்கிறார்கள். காங்கிரஸ் இதற்கான கோட்பாடு வேலைகளை செய்திருக்கும் என நினைக்கிறேன்.

சற்று வேகமாக அவர்களே அமல் செய்திருக்கலாம். காவிக்கட்சியில் இருப்பவர்களுக்கு மூளை என்ற ஒன்று இருக்கிறதா, வேலை செய்கிறதா என்பதே அதிசயம். அவர்கள் இதனை அமல்படுத்தினார்கள் என்றால் நம்பமுடிகிறதா உங்களால்? ஜிஎஸ்டி வரியால் சினிமா, ரியல் எஸ்டேட் ஆகிய துறைகள் சிரமப்பட போகின்றன என்கிறார்கள். ஆடிட்டர் என்பவர் இருக்கும்வரை அந்த பிரச்னை வராது. அவர்களே மத்திய அரசின் அனுமதி பெற்றுத்தானே வரி ஆலோசனை சொல்கிறார்கள்.

எங்கள் ஆசிரியர் கே.என்.சிவராமன் எனக்கு புத்தகம் ஒன்றைப் படிக்க கொடுத்தார். பயணசரித்திரம் — முகில் எழுதிய நூல். உலகைச் சுற்றி வந்த ஆதி முதல் 14ஆம் நூற்றாண்டு வரையிலான யாத்ரீகர்களைப் பற்றிய பதிவுகளே நூல். சுவாரசிய நடையில் எழுதப்பட்டுள்ள வரலாற்று நூல் இது. விலை 333. நான் படித்துவிட்டு ஆசிரியரிடமே கொடுத்துவிட நினைக்கிறேன். அவர் பெரும்பாலான

நூல்களை எனக்கு தந்துவிடவே நினைக்கிறார். எனக்கு தர்மசங்கடமாக இருக்கிறது. என்னுடைய சம்பளத்திற்கு அத்தனையும் வாங்கவும் முடியாது. அவர் கொடுப்பதை மறுக்கவும் முடியாது.

நன்றி!

சந்திப்போம்.

ச.அன்பரசு
19.7.201`7

31

# அரசுப்பணி எதற்கு?

*இனிய நண்பர் அன்பரசுவுக்கு, வணக்கம்.*

*நலமாக இருக்கிறீர்களா? பொதுவாக அரசு ஊழியர்கள் அவர்களின் சுயநலத்திற்குத்தான் வேலை செய்வார்கள் என்ற எண்ணம் அனைத்து மக்களிடம் இருக்கிறது. இதில் படித்தவர்கள், படிக்காதவர்கள் என யாருக்கும் பெரிய விலக்கு இல்லை. அரசு வேலை என்பதே முன்னர் பார்ப்பனர்களின் உரிமையாக இருந்தது. இன்று கூட*

வங்கித்துறையில் அவர்களின் கொடிதான் பறக்கிறது. சமூகத்திலுள்ள அனைவருக்கும் வாய்ப்பு தரவேண்டும். அவர்களின் வளர்ச்சிக்கு உதவ வேண்டும் என்ற எண்ணத்தில்தான் அனைத்து சமூகத்தினருக்கும் அரசு பணி வாய்ப்பு வழங்கப்பட்டது.

இன்று அரசு ஊழியர்கள் தம் உரிமைகளைக் கேட்டால் கூட அரசியல்வாதிகள், தமது செயலின்மையை மறைக்க பல்வேறு தந்திரங்களைக் கையாள்கிறார்கள். அதில் ஒன்றுதான், பணியாளர்கள் தமது தகுதிக்கு மிஞ்சிய சொகுசைப் பெற்றுள்ளார்கள் என்று ஊடகங்கள் வழியாக மக்களை நம்ப வைப்பது. இந்த விஷயத்தை அரசு மிக நைச்சியமாக கையாள்கிறது.

நீங்கள் எழுதிய கடிதம் எனக்கு இந்த விஷயத்தை நினைவுபடுத்தியது. வரிகளைக் கட்டாமல் எல்லாம் நாங்கள் இல்லை. மாத சம்பளக்காரரர்களாக இருக்கும் வரையில் வரி கட்டுவதைத் தவிர்க்க முடியாது. வரித்துறையினரே எடுத்துக்கொள்வார்கள். தொழில் செய்தால் ஆடிட்டர் வைத்து வரியைக் குறைத்துக்கொள்ளலாம். தனிநபராக இருந்தால் வரிவிலக்குக்காக அரசு நிறுவனங்களில் காப்பீடுகளை வேண்டாவெறுப்பாக எடுக்க

வேண்டியிருக்கிறது.

நீங்களாகவே தேடி நூல்களை வாசிக்க கூடியவர்தான். அதேசமயம் உங்கள் ஆசிரியரும் உங்களுக்கு நூல்களை கொடுத்து வாசிக்க சொல்கிறார் என்றால் பெரிய விஷயம்தான். இந்த அணுகுமுறை பாராட்டப்படவேண்டியது. நிறைய பேர் இப்படி ஊக்குவிப்பது கிடையாது. உங்கள் ஆசிரியர் நிச்சயம் வேறுபட்டவர்தான். எழுதுவதற்கு வாசிப்பு முக்கியம். நன்றாக சாப்பிடுங்கள்.

நன்றி!

அ.ராமமூர்த்தி

*24.7.2017*

32

# பொழுதுபோக்கு போராட்டங்கள்!

*ஆருயிர் தோழர் ராமமூர்த்திக்கு வணக்கம். நலமாக இருக்கிறீர்களா?*

ஒருமணிநேரமாக பின்னி பெடலெடுத்த மழை இப்போதுதான் நின்றிருக்கிறது. மழை விட்டும் தூவானம் விடவில்லை. பணிச்சுமை காரணமாக கடிதம் எழுதவில்லை. மன்னியுங்கள். ஆ.,வியில் மையம் கொண்ட சைக்ளோன் தொடர் வாசித்தீர்களா? அதில் குளோபல் ஆக்டர் பேசுகிறார். அவரின் பேச்சு முழுவதும் ஊழல் ஒழிப்போம் என்று ஞாயிற்றுக்கிழமை வேலையின்றி தேநீர் சட்டை அணிந்து காமராஜர் சாலையில் பேரணி செல்பவர்களுக்கானது.

அன்றைய பொழுது இனிதாக கழிய வேண்டுமல்லவா? இடியாப்பத்தில் இட்லியை நுழைத்து பேசும் அவரது பேச்சு அறிவுநுட்பமானவர்களுக்குப் புரியலாம். அனைவருக்கும் புரியும்படி யாரேனும் செய்தியாளர்கள் அவர் சொன்னதை திரும்ப எழுதினால்தான் உண்டு. இவருக்கு ஏதாவது வாயப்பு உண்டா? இருக்கிறது. ஒட்டுமொத்த இந்தியாவில் 30 சதவீதம் மட்டுமே வாக்குகள் பெற்று மத்தியில் காவிக்கட்சி ஆட்சிக்கு வருகிறது என்றால் இந்த தேசத்தில் எதுதான் நடக்காது?

மக்கள் ஜனநாயகப்பூர்வமாக வாக்குகளை போடுகிறார்கள். ஆனால் ஜெயித்தவர்கள்

அதற்குப்பிறகு, தங்களுக்கு பிடித்த கட்சியுடன் சேர்ந்து ஆட்சி அமைக்கிறார்கள், இதை முன்கூட்டியே செய்தால் தேர்தல் செலவு கூட மிச்சமாகும் அல்லவா? முன்பு தேர்தலுக்கு ஒரு மரியாதை இருந்தது. இன்று அனைத்து அமைப்புகளின் நம்பகத்தன்மையும் சரிந்து வருகிறது.

ஹர ஹர மகாதேவகி படம் பார்த்தேன். படத்தை வீடியோவாக பார்ப்பதை விட ஒலிச்சித்திரமாக கேட்டுவிடலாம். ஏடாகூட படம் என்று சொல்லுவதெல்லாம் உல்லுல்லாயி. அதனால் படத்தை நீங்கள் எதிர்பார்ப்பு இல்லாமல் பார்க்கலாம். கி.மு. கி.பி. — கார்ட்டூனிஸ்ட் மதன் எழுதிய நூலைப் படித்தேன்.

உலகம் தோன்றியது முதல் அசோகர் பௌத்த மதம் தழுவியது வரையில் எளிமையாக விவரித்துச்செல்கிறது நூல். ஜாலியாக எழுதியிருக்கிறார் என்பதால் வரலாறு தூக்கம் வரவைக்கவில்லை. இந்த நூலில் டூட்டாங்க் என்ற மன்னர் இறப்பது, அதிமுக நிரந்தர பொதுசெயலாளர் ஜெயலலிதா இறந்ததை நினைவுபடுத்தியது. அம்மன்னரும் இதேபோலத்தான் தி டீ ரெ ன மர்மமாக இறந்துபோகிறார். ரீஎன்ட்ரி வரலாறு செய்தி ஆசம். நீங்கள் வாங்கி வைத்த

இடதுசாரி நூல்களுக்கு திரும்பியிருப்பீர்கள். விரைவில் எங்கள் நிறூவன பதிப்பகத்தில் சிவந்தமண் என்ற இடதுசாரி வரலாற்று நூல் வெளிவரவிருக்கிறது. வேலைகள் நடந்து வருகிறது. பார்ப்போம்.

நன்றி, சந்திப்போம்

ச.அன்பரசு
16.11.2017

33

# டிஜிட்டல் இசைவிழா!

அன்பு நண்பர் ராமமூர்த்திக்கு, வணக்கம். நலமாக இருக்க இறைவனை பிராத்திக்கிறேன்.

தேர்தல் நேரத்தில் ஜிஎஸ்டியைக் குறைத்திருக்கிறார்கள். ஏன் என்று கூட அறிவிக்கும் தெனாவட்டு பிற்காலத்தில் அவர்களுக்கு கிடைக்கலாம். பேங்கில் டெபாசிட் செய்யப்போனால் டோக்கன் போட்டுவிட்டு அலைபாய்ந்துகொண்டிருக்க வேண்டியிருக்கிறது. ஆனால் வங்கியில் கடன் வாங்குபவருக்கு பேப்பர்போட் குளிர்பானம் வழங்கி கௌரவித்து கடன் கொடுத்து அனுப்பி வைக்கிறார்கள்.

அச்சமயத்தில் கடன் வாங்குபவரை அடுத்து நாம் நாளிதழில் இங்கிலாந்தில் இருக்கிறார் என்று செ ய் தி யா க மட்டுமே தகவல் அறிவோம். இவர்களின் கடன் வழங்கும் வேகத்தைப் பார்த்தால் நூறுரூபாய், ஐம்பது ரூபாய்கள் கூட எத்தனை நாட்களுக்கு செல்லும் என்று சந்தேகம் வருகிறது.

மனிதனும் மர்மங்களும் — கார்ட்டூனிஸ்ட் மதன் எழுதிய புத்தகத்தை படித்துக்கொண்டு இருக்கிறேன். தீவிர அரசியல் மீது ஆர்வம் கொண்டவர் நீங்கள். எனவே அரசியல் பற்றிய ஏதேனும் நூல்களை வாசித்துக்கொண்டு இருப்பீர்கள்.

மு ன் ன ர் , துறை சார்ந்த விஷயங்கள் பற்றி நான் முத்தாரத்தில் எழுதச்சொல்லி தங்களை தொந்தரவு செய்தேன். ஆனால் நீங்கள் மறுத்துவிட்டீர்கள். முடிந்தளவு நீங்களாவது அதனை பதிவு செய்து வைத்தால் பின்னாளில் யாருக்கேனும் பயன்படும். மூளை பெருத்தவர்கள் பலரும் இன்டலெக்சுவல் மாஸ்டர்பேஷன் செய்யும் இடத்தில், தகவல்களை மக்களிடமே பகிர்வது நல்ல விஷயம்தானே ?

மழை நிற்காமல் பெய்துகொண்டிருக்கிறது. இரவு இன்னும் இருளாக குளிர்ச்சியாக இருக்கிறது. நாளை நீந்தியும் அலுவலகத்திற்கு செல்லும் பாக்கியம் கிடைக்கலாம். காங்கேயம் பகுதியில் மழை உண்டா ?

அண்மையில் எங்கள் அலுவலகத்தில் இசைவிழா ஒன்றுக்கு அழைப்பிதழ் கிடைத்தது. எடிட்டர் எங்களை அழைத்துச் சென்றார். ஆழ்வார்பேட்டை அருகிலுள்ள மியூசிக் அகாடமியில் விழா நடைபெற்றது. இசையில் தொடங்குதம்மா எனபது நிகழ்ச்சியின் பெயர். நிகழ்ச்சியை இளையராஜாவின் மூத்த மகன் கார்த்திக் ராஜா நடத்தினார். தனியாக இசையமைத்து முன்னேறி வருவார் என்று நினைத்தேன். ஆனால் அப்பாவின் நிழலுக்குள்ளேயே ஒதுங்கிக்கொண்டார். பாடியவர்கள் யாரும் சுயமாக பாடியிருந்தால் பரவாயில்லை. பலரும் இன்னொருவர் பாடியதை அப்படியே நகல் செய்து பாடினார்கள்.

பாடகி ரீடா குரலுக்கு பயிற்சி செய்வதை விட முக அழகுக்கு பல நாட்கள் ஒப்பனைப் பயிற்சி செய்திருப்பார் போல. எனக்கு நிகழ்ச்சியில் திருப்தி இல்லை. எம்.ஜே. ஸ்ரீராம் என்பவர் பாடியது பரவாயில்லை என்று பட்டது. இவர் எஸ்பிபி போலவே உருவத்திலும் குரலிலும் இருந்தார். கொஞ்சமேனும் சிரத்தை எடுத்து பாடியது இவர் ஒருவர்தான்.

பவதாரிணி எந்த பயிற்சியும் இல்லாமல் பாடியது அப்படியே காதார உணர முடிந்தது. மொத்தம் 25

பாடல்கள். மிருதங்கம் வாசித்த விக்ரம் என்பவர் அசத்தலாக உழைத்தார். கீபோர்ட் வாசித்தவரும் நன்றாக பணியாற்றினார். அனைத்தும் மேக் கணினியை நம்பி ஒப்படைத்துவிட்டதால் விழாவில் எதிர்பார்க்க ஏதுமில்லை.

*நன்றி !*

*சந்திப்போம்*

*ச.அன்பரசு*
*16.11.2017*

34

# பாரபட்சமான சமூகம்!

அன்புள்ள அன்பரசுக்கு, வணக்கம்.

எப்படியிருக்கிறீர்கள். ஊருக்கு வந்தபோது உங்கள் உடலைப் பார்த்தால் நீங்கள் நிறைய பணத்தை சேமிக்கிறீர்கள் என்பது போல படுகிறது. உடல் இருந்தால்தான் கனவுகள் சாத்தியம் என்பதை எப்போதும் மறக்காதீர்கள். கமலின் ரசிகனாக நான் ஒரு காலத்தில் இருந்தேன். அவரை அப்படியே உடைகளில் இமிடேட் செய்ய முயன்றேன் என்பது உண்மை. ஆனால் காலம் அவரது தலையிலும் கருத்திலும் வெள்ளையடித்த பிறகு நான் அவரைப் பின்தொடர்வதை நிறுத்திவிட்டேன். அவரது நாசூக்கான காமெடியை விட வடிவேலு காமெடி என்னை சிறப்பாக மகிழ்விக்கிறது.

கமல் நடிகராக கதாபாத்திரத்தில் வந்தால் பரவாயில்லை. ஒருகட்டத்தில் அனைத்துமே நான்தான் என்று சொல்வது போல அனைத்து விஷயங்களையும் ஆக்கிரமிக்க தொடங்கினார். கதாபாத்திரமாக தெரியாமல் கமலாகவே திரையில் அவர் வந்தபோது என்னால் அவரை ரசிக்கமுடியவில்லை. தன் புத்திசாலித்தனத்தை

அவர் நிரூபிக்க முயன்றாரே ஒழிய தான் சொல்லும் கருத்து அனைவருக்கும் சென்று சேர்ந்ததா என்று கவலையே படவில்லை.

முன்னாள் முதலமைச்சரின் இறப்பை வரலாற்றோடு தொடர்புபடுத்தியிருந்தீர்கள். அது உண்மையில் புதுமையான செய்திதான். தன் கட்சியிலுள்ள அடிமைகளை காரின் டயர்களை நக்கவைத்த பெருமை அம்மையாரையே சேரும். அவருக்கு ஆண்களை வெற்றிகொள்ளும் வெறி இறுதிவரை இருந்தது. மனிதர்களாக பிறந்தால் யாரையாவது நம்பித்தானே ஆகவேண்டும். கூடாநட்பு மீது கொண்ட நம்பிக்கையே அவர் வீழ காரணமாகிவிட்டது. வரலாற்றில் நயவஞ்சகம், சூழ்ச்சி, துரோகத்திற்கு குறைவா என்ன?

உங்களுக்குள் அன்பரசு தவிர இன்னொருவர் இருக்கிறாரா? ஒருவர் தீவிரமான நூல்களைப் படிக்கிறார். இன்னொருவர் சூரமொக்கைத் திரைப்படங்களைப் பார்த்து அதனை விமர்சிக்கிறார். வித்தியாசமான குணங்களின் சேர்க்கைதான் நீங்கள். நான் துறைசார்ந்த உயர்பதவிகளுக்கான தேர்வை எழுத நினைத்துள்ளேன். இவர்களாக நமக்கு பதவி உயர்வு கொடுப்பது சாத்தியமில்லை. எனவே நாமே

முயன்று ஏதாவது செய்தால்தான் திருமணமாகி பிறக்கும் மகனுக்கு வழிகாட்டுவதற்கு கையில் சக்தி இருக்கும். எதையும் நிரந்தரமாக நினைத்துவிட முடியாது. எப்போது வேண்டுமானாலும் நிலைமை மாறலாம்.

இங்கு அனைத்து இடங்களிலும் பாரபட்சம் உண்டு. வங்கி மட்டும் அதற்கு விதிவிலக்கா என்ன? வங்கி கொள்கைப்படி முடிந்தளவு கடன்களை தொழில்துறைக்கு வழங்க அரசும் ரிசர்வ் வங்கியும் கட்டாயப்படுத்துகின்றன. ஆனால் கடன்களை திரும்ப தொழில்நிறுவனங்கள் கட்டாதபோது, அவர்களிடம் கட்சிக்கு நன்கொடை வாங்கிக்கொண்டு அவர்கள் வெளிநாடுகளுக்கு தப்பிக்க வைக்கின்றனர். அப்புறம் எப்போதும் போல வேறுவழியில்லை என்று சொல்லி மக்களின் இருப்புத்தொகையை அலேக்காக வாரிச்சுருட்டுவது நடைபெறுகிறது.

இது காங்கிரஸ் ஆட்சியில் மெதுவாகவும் காவி ஆட்சியில் வேகமாகவும் நடைபெறுகிறது. வெகுவிரைவில் பொதுத்துறை வங்கிகளை சிறப்பாக நிர்வாகம் செய்யமுடியவில்லை என்று அரசு சொல்லும். அதற்கு தீர்வாக தனியார் நிறுவனங்கள் பொதுவங்கிகளை ஏலத்தில் வாங்கி நடத்துவதற்கும்

வாய்ப்பிருக்கிறது.

இசைவிழா பற்றி எழுதியிருந்தீர்கள். அதை விவரித்த விதம் நன்றாக இருந்தது. சுமாராக நம்மூரில் நடக்கும் ஆர்க்கெஸ்ட்ரா போல இருந்திருக்கும் என ஊகிக்கிறேன். நல்ல ஸ்பீக்கர் வைத்திருப்பார்கள். ஆனால் பாடியவர்கள் சரியில்லை என்றால் ஸ்பீக்கர் என்ன செய்ய முடியும்? உடம்பைப் பார்த்துக்கொள்ளுங்கள்.

நன்றி

அ.ராமமூர்த்தி

20.11.2017

35

# நூல்களைக் கொடுக்கும் வள்ளல்!

அன்புத்தோழர் ராமமூர்த்திக்கு, வணக்கம். நலமாக இருக்கிறீர்களா?

கடந்த வாரமே நான் இந்த கடிதத்தை எழுதியிருக்கவேண்டும். ஆனால் இடையில் வந்த கல்யாணம் ஒன்று சிக்கலை ஏற்படுத்திவிட்டது. இஸ்லாமிய நண்பரின் வீட்டுக்கு கல்யாணச் சாப்பாடு வெறியில் போய்விட்டேன். பிரியாணியை அள்ளி திணித்த வேகத்தில் செரிமானத்தின்போது வயிறு விண்டோஸ் போல ஷட்டவுண் ஆகிவிட்டது. வயிறைக் காலி செய்ய நேரமாகிவிட்டது.

அலுவலகத்தில் கடிதம் எழுதிவிடலாம்தான். ஆனால் வாட்ஸ்அப் காலத்தில் கடிதமா என அதிசயப் பிறவி போல பார்க்கிறார்கள். என்னடா பிரச்னை உங்களுக்கு என மனதில் நினைப்பதைப் பேசினால் சண்டை வந்துவிடும். இரவில் மட்டும்தான் சொந்த வேலைகளை, எழுத்து வேலைகளைப் பார்க்கிறேன்.

இந்த ஆண்டு தீபாவளி மலரில் ஆசான கே.என்.சிவராமன் எதுவுமே எழுதவில்லை. எனக்கு

இதில் பெரும் வருத்தம். அவருக்கு எழுதுவதில் இப்போதெல்லாம் விருப்பமில்லை. அனேகமாக வேலைகள் அழுத்தம் காரணமாக இருக்கலாம். தினசரி ஆறு மணிக்கு மேல் அவரை இருக்கையில் பார்ப்பது கடினம்.

நாம் சீட்டில் உட்கார்ந்திருந்தால் கோபம் வந்துவிடும். மெல்ல அதட்டுவார். போதும்பா, நீயும் இருக்காதே. வீட்டுக்குப் போய் சந்தோஷமாக இரு என்பார். தற்போது வாசிப்பில் நாவல்கள் குறைந்துவிட்டன. மதிப்புரைக்கு வரும் நூல்களில் யாருக்கு என்ன நூல்கள் பிடிக்குமோ அந்த நூல்களை ஆசிரியரே தேர்ந்தெடுத்து வந்து அவரவர் இருக்கையில் வைத்துவிட்டு சென்று விடுகிறார். இப்படி நிறைய கட்டுரை நூல்கள் கையில் சேர்ந்துவிட்டன. அவர் வாசிக்கும் நூல்களிலும் நாம் எழுதும் பிரிவுகள் இருந்தால் உடனே படிக்க கொடுத்துவிடுவார். திரும்ப வாங்கவே மாட்டார். பெருந்தன்மையான மனசுக்காரரர்.

தற்போது காங்கேயத்திலும் மழை பெய்துகொண்டிருக்கலாம். நவம்பர், டிசம்பர் மாதங்கள் வந்தால் சென்னை பதற்றமாகி விடுகிறது. இப்போது டெங்கு காய்ச்சல் இங்கு பரவி வருகிறது. இப்போது மழை நிற்காமல் பெய்தால் என்னாகும்?

இயற்கை தன்னைத்தானே சமநிலையில் வைத்துகொள்ளும் என்று நினைக்கிறேன். சரி, தவறு என்பது இயற்கையின் அமைப்பில் கிடையாது.

*நன்றி!*

*சந்திப்போம்!*

*ச.அன்பரசு*
*19.11.2017*

36

# மரண தண்டனை தீர்வல்ல!

அன்புத்தோழர் ராமுவுக்கு, வணக்கம் நலமாக இருக்கிறீர்களா?

கௌசல்யா — சங்கர் விவகாரத்தை நாளிதழ்களில் படித்திருப்பீர்கள். கௌசல்யாவின் கணவரைக் கொன்ற குற்றத்திற்காக அவரது தந்தை உள்ளிட்டவர்களுக்கு தூக்குதண்டனை உறுதி செய்யப்பட்டுள்ளது. சாதி என்பது பிறப்பில் பிறப்பதல்ல. அதைப்பற்றிய சிந்தனை மூளையில் உள்ளது. கருத்தியல் என்பது அழிவில்லாதது.

பார்ப்பனர்களை நாம் அதற்காக திட்டினாலும் அவர்கள் விதைத்த விஷம் இங்கு இடைநிலைச்சாதி

உட்பட அனைத்து சாதிகளிலும் ஆழமாக இறங்கிவிட்டது. சாதி மேலாதிக்கம் என்பது முடியரசு மூலம் உரம்போட்டு வளர்க்கப்பட்ட கலாசாரமாக இருக்கிறது. நீதிமான்களே குறிப்பிட்ட சாதிக்காரரர்களாகத்தானே இருக்கிறார்கள்? அவர்களின் சுத்தியலுக்கு நீதிமன்ற மனிதர்கள் பயப்படுவார்க். சாதி பயப்படாது.

சங்கர் கொலைசெய்யப்பட்டது சாதி கௌரவத்திற்காக என்கிறார்கள். இப்போது சட்டப்படி கௌசல்யாவின் தந்தை சிறையில் காத்திருந்து சாகப்போகிறார். இது கொடுமையான ஒன்று. இந்த தண்டனை என்ன மனநிலை மாற்றத்தை ஏற்படுத்தும் என்று தெரியவில்லை.

ஆ.வியில் நீதி கிடைத்துவிட்டது என உற்சாகமாக கட்டுரை எழுதுகிறார்கள். கன்று இறப்புக்கு பதிலாக மகன் இறக்கவேண்டும் என்பது அன்றைய நீதியாக இருக்கலாம். இன்றுமா? இந்தியச்சட்டம் மனம் வருந்தி திருந்துவதற்கான வாய்ப்பை வழங்கிவந்தது. மரணதண்டனையை இறுதி தீர்வாக ஒருவர் முன்வைத்தால் அது சரியான முறையல்ல என்று நினைக்கிறேன். சாதி கௌரவம் என்று கௌசல்யாவின் தந்தையை எண்ண வைத்தது அவரது மூளையிலுள்ள எண்ணம் மட்டுமல்ல,

சுற்றியுள்ள சமூகமும்தானே அந்த அழுத்தத்தை கொடுத்தது. அதற்கென்ன தண்டனை?

அமெரிக்காவில் உள்ள மின்சார நாற்காலி போன்ற பைத்தியக்காரத்தனத்திற்கு இந்தியா மாறி வருகிறதோ என்று பயமாக இருக்கிறது. குடியரசுத்தலைவராக இருந்த காங்கிரஸ் தலைவர் பிரணாப் முகர்ஜி காலத்திலிருந்தே கருணை மனுக்கள் எதுவும் ஏற்கப்படுவதில்லை. அப்புறம் எதற்கு அவருக்கு அனுப்ப வேண்டும்? இறுதியாக வாழ ஒருவருக்கு வாய்ப்பளிக்கும் உரிமை அவருக்கு மட்டுமே உண்டு. இப்படி சிதைவு கண்டு இரக்கமில்லாத சமூகம் உருவாகி வருவது ஆபத்தானது.

தவறு செய்தவர் திருந்தி மனம் வருந்தி நன்னிலை பெறுவதே நீதி. தூக்கு உடலுக்குத்தான். அவர் விதைத்த, செய்த செயலின் விளைவுகளை அவர் பார்க்கப்போவதில்லை. எவ்வளவு நிம்மதியான சாவு. அவரின் செயல் மூலம் சமூகத்திற்கு சொன்ன செய்தியை யாரும் மறப்பதில்லை. முஸ்லீம்களை இந்துத்துவவாதிகள் பாகிஸ்தானுக்கு போல என அவர்களை அடித்துக்கொன்றுவிட்டு பாடம் எடுக்கிறார்களே அதுபோல. உத்தமர் அப்பெண் மீது கல் எறியட்டும் என்று சொன்னது சத்திய

வார்த்தைதானே என்று எனக்குத் தோன்றுகிறது.

*நன்றி!*

*சந்திப்போம்*

*ச.அன்பரசு*
*26.12.2017*

37

# ஏழைகளுக்கு மதிப்பு கிடையாது!

சுயமரியாதை தோழர் ராமுவுக்கு வணக்கம். நலமா?

மற்றவர்களுக்கு சனிப்பெயர்ச்சி. திமுகவுக்கு ஷைனி பெயர்ச்சி என ஜூ.வியில் எழுதியிருக்கிறார்கள். உங்கள் பேச்சு ஏழு ஆண்டுகளுக்குப் பிறகு நிஜமாகியிருக்கிறது. பணத்தை நேரடியாகப் பெற்றாலும், நிறுவனப் பங்குகளாகப் பெற்றாலும் குற்றம்தான். இதற்கு காரணமானவர்கள் சிறையில் அடைக்கப்பட்டுள்ளது வரலாற்றிலும் பதிவாகிவிட்டது. நீதித்துறை பரிசுத்தமானது என்பதல்ல நான் சொல்ல விரும்புவது. கொஞ்சமேனும் அங்கும் ஆதாரங்களைக் கணக்கில் கொண்டு சட்டத்திற்குட்பட்ட முடிவுகளை எடுக்கிறார்கள் என்று நினைக்கிறேன்.

காட் ஒப்பந்தம் தொடங்கி பல்வேறு உலக நாடுகளுக்கான ஒப்பந்தங்கள், உலக வங்கியிடம் கடன் வாங்குவது அனைத்துமே நம் சுயசார்பை அடகு வைத்துதான் பெற்றிருக்கிறோம். பிஎஸ்என்எல்லுக்கு புதிய தொழில்நுட்பங்கள் வழங்க தாமதப்படுத்துவது தொடங்கி அரசு

நிறுவனங்கள் முக்கியமான அரசின் ஒப்பந்தங்களில் கலந்துகொள்ளக்கூடாது என விதிகளை மாற்றுவது வரையில் மத்திய அரசு கவனமாக வேலை செய்கிறது. இதில் கைக்கட்சியை விட காவிக் கட்சிக்கு பெரும்பான்மை இருப்பதால் வேகம் அதிகம். அனேகமாக வழக்கு போட்டு அதில் நீதி கிடைக்கும் என்ற நம்பிக்கை கொண்ட இறுதி தலைமுறை நாம்தான்.

89, 90 ஆண்டுகளுக்குப் பிறகு பிறந்தவர்களிடம் நேர்மையை மதிப்பை உணர வைப்பது கடினமாக இருக்கிறது. அவர்களுக்கு ஒரே விஷயம்தான் முக்கியம். நாம் நன்றாக இருக்கவேண்டும் என்பதுதான் அது. ஊர் எக்கேடு கெட்டால் என்ன என்று செவத்த புள்ளையைக் கல்யாணம் செய்துகொண்டு சீன போன்களில் செல்ஃபீ எடுத்து பதிவிட்டுக்கொண்டிருக்கிறார்கள்.

நகரத்தில் பலரின் வாழ்க்கையே விலா எலும்புகளை நொறுக்குமளவு இஎம்ஐயில் ஓடிக்கொண்டிருக்கிறது. இதில் எங்கே புரட்சி செய்வது? தேசபக்தி எல்லாம் 70, 90களில் வந்த படத்தை பார்த்தால் போதும் என்றளவுக்கு வந்துவிட்டது. இந்தியாவில் ஏழைகள் வாழ்வதே பெரிய விஷயம்தான். தினசரி போராட்டங்களுடன்தானே வாழ்ந்து வருகிறோம்.

புதிய இந்தியா இனிதான் பிரசவமாகப் போகிறதா என்ன ?

நன்றி !

சந்திப்போம்

ச.அன்பரசு
*26.12.2017*

38

# சாதிவெறிக்கு என்ன தண்டனை?

அன்புள்ள தோழருக்கு வணக்கம். நலமாக இருக்கிறீர்களா?

நீங்கள் கடிதம் எழுதுவதை தாமதம் என்று சொன்னால் நான் உங்களுக்கு அனுப்பும் கடிதங்களை என்னவென்று சொல்லுவது?

நான் முன்னமே கடிதம் வழி எழுதியிருந்தது போல இப்போதெல்லாம் மனசார நான்கு வார்த்தை பேசினால் நன்றாக இருக்கிறது. எழுதுவது என்பது எனக்கு தேர்வில் மட்டுமே வாய்க்கிறது. மற்றபடி ஊரில் நாயம் பேசித்தானே நாம் இரண்டு பேரும் அறிமுகமானோம். நீங்கள் பத்திரிக்கையாளராக இருக்கிறீர்கள். கடிதம் எழுதுவதை பின்னாளில்

நீங்கள் நூலாக கூட மாற்ற வாய்ப்பு இருக்கிறது. அதுவும் நீங்கள் கடிதம் எழுதுவதை பயிற்சியாக கூட கருதலாம்.

எழுத்துக்கு எப்போதும் பயிற்சி தேவைப்பட்டுக்கொண்டேதான் இருக்கிறது. சைவம் சாப்பிடுகிறீர்கள் என்று சொல்லி வந்தீர்கள். இப்போது பார்த்தால் முஸ்லீம் நண்பர் வீட்டுக்குப் போயிருக்கிறீர்கள். அவர்கள் அனைத்து ஐட்டங்களிலும் செம்மறி ஆடு, கோழி, மாடு என இறைச்சியை கலப்பார்கள். கவனமாக சாப்பிடுங்கள். உங்களுக்கு நோய் எதிர்ப்பு சக்தியும் குறைவு. செரிமானத்திறனும் குறைவு. அப்புறம் உடல் பந்த் செய்யாமல் என்ன செய்யும்?

உங்கள் எடிட்டர் படிப்பது, எழுதுவது, பேசுவது அனைத்திலும் விற்பன்னர் போல. நேரத்தை திறமையாக திட்டமிட்டு பயன்படுத்துபவர்களுக்கு மட்டுமே எதையாவது சாதிக்கிறார்கள் என்று நினைக்கிறேன். பரவாயில்லை அவர் கொடுத்தாலும் கொடுக்காவிட்டாலும் உங்களுக்கு என்ன தேவையோ அதை நீங்கள் தேடிப்படிக்கிற ஆள்தான்.

சாதிவெறிக்கு எதிராக தண்டனை வருவதில் சமூகம் இன்னும் விழிப்புநிலையை அடையவில்லை என்று நினைக்கிறேன். இந்த தண்டனைகளுக்கு பயந்து

யாரும் குற்றங்களை செய்யாமல் இருப்பதில்லை. காரணம், இவற்றையெல்லாம் தாண்டியது குடும்ப கௌரவம், தூய்மையான இனம் என்பதில் வெறி கொண்டுள்ளார்கள் தமிழக மக்கள். தாழ்த்தப்பட்ட, பட்டியலின மக்களைப் பற்றிய வசைச்சொல், பழமொழிகளாக எத்தனை உள்ளது என்று அறிந்து இருப்பீர்கள். அவை அனைத்தும் திட்டமிட்டு குறிப்பிட சாதியை இழிவுபடுத்தி அதேநிலையில் இருக்க வைக்க உண்டானதுதான்.

இதற்காக பல்வேறு தடைகளை ஏற்படுத்தி அவர்களை குறிப்பிட்ட தொழிலில் இருக்க வைக்க முயல்கிறார்கள் பார்ப்பனர்கள். அவர்கள் ஏற்படுத்திய விஷம் இன்னும் மேல்சாதி, இடைநிலை சாதியினரின் நரம்புகளுக்குள் வீரியத்தை வெளிப்படுத்திக்கொண்டே இருக்கிறது. சட்டரீதியான தண்டனை அவர்களை சமூக கொடூரங்களிலிருந்து விலக்கி வைக்கும் என்று நம்பவில்லை. ஆனால் மக்கள் கருத்து என்ற விஷயத்தை வைத்தும், காவல்துறையினரின் கையாலாகத்தனத்தை சரி செய்யவும் மரணதண்டனை, ஆயுள்தண்டனையைப் பயன்படுத்திக்கொள்கிறார்கள்.

கௌரவ, ஆணவக் கொலைகளை செய்பவர்களுக்கு

மனநல தெரபி சிகிச்சை கொடுத்து தனிமைப்படுத்தி சிலகாலம் வைப்பது நல்லது. மரணதண்டனை ஒருவருக்கு சிறந்த விடுதலையை அளித்துவிடுகிறது. இதில் அவர் பாதிக்கபட்டவர்களின் வலியை எப்படி உணர்வது? பிறரின் வலியை அவர் மனதில் காலமெல்லாம் உணர்ந்துகொண்டே இருக்கவேண்டும். அவர் சமூகத்தில் புறக்கணிக்கப்பட்டு வாழ்வதுதான் சரியான தண்டனை என்று நினைக்கிறேன்.

காதலை ஏன் வருகிறது என்று ஆராய்ச்சி செய்யவில்லை. ஆனால் முதல்தலைமுறையாக ஏதாவது செய்வான் என்று கடன்பட்டு படிக்ககவைத்த சங்கரின் பெற்றோர்களை நினைத்துப்பாருங்கள். அவர்களின் எதிர்காலம் இக்கொலையோடு முடிவுக்கு வந்துவிட்டது. தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்த ஆண்கள் தொடர்ச்சியாக வெட்டிக் கொலைப்படுவது அவர்களது தலைமுறையை அழிக்கும் முயற்சியாகவே நினைக்கிறேன்.

மரண தண்டனையை ஒழிப்பது என்பது இங்கு சிறு குழுவின் முயற்சியாகவே இருக்கிறது. அதனை மக்கள் அனைவரும் ஒன்றாக சேர்ந்து ஒழிப்பதற்கு இன்னும் பல்லாண்டுகள் ஆகும். விசிலடிச்சான்

குஞ்சுகளே முதல்வர்களாக வரும் நிலையில் பல்வேறு உருப்படியான சிந்தனைகளை இவர்கள் பின்பற்றுவதுமில்லை. அறிவுப்பூர்வமான நூல்களை வாசித்துக் கற்றுக்கொள்வதுமில்லை. வணிக ஒப்பந்தங்கள் நமக்கு சேவை செய்யவிடாமல் அரசை தடுப்பதாக நீங்கள் நினைக்கிறீர்கள். அப்படியெல்லாம் கிடையவே கிடையாது.

இன்று நஷ்டத்திலுள்ள அரசு துறையை உருப்படியான குடிமைப்பணி அதிகாரி கையில் கொடுத்துப் பாருங்கள். லாபம் சம்பாதிக்கிறதா இல்லையா என்று. ஆனால் அரசுக்கு பொதுத்துறை நிறுவனங்கள் எப்பாடு பட்டாலும் மேலே வந்துவிடக்கூடாது என்றுதான் உரிமங்களை வழங்க தாமதம் செய்கிறார்கள். இப்படி பாகுபாடு காட்டினால் சீனாவைப் போல நாம் எப்படி வளரமுடியும்? சீனா தன் ஆதிக்கத்தை உலகம் மு ழு க் க வலுப்படுத்த தனியார் நிறுவனங்களை வளர்ச்சியை மட்டுபடுத்துகிறது. அந்நாட்டிலுள்ள அரசு நிறுவனங்கள் அனைத்து உலகளவிலான ஏலங்களில் கலந்துகொள்ள தயாராக இருக்கிறார்கள்.

காவி வெறியர்களின் ஆட்சியில் பொதுத்துறையை தேனடை போல பிய்த்து தின்ன தனியார்

நிறுவனங்களை வரிசையில் நிறுத்தி வருகிறார்கள். வட இந்திய மக்கள் இவர்களால்தான் தங்களுக்கு வளர்ச்சி கிடைக்கும் என நம்புகிறார்கள். இந்த அநியாயத்திற்கு அக்கட்சிக்கு வாக்களிக்காத நாமும் பலியாகி வருகிறோம். இந்த துரோகங்களை மறைக்க அடிக்கடி சுதேசி பொருட்களை வாங்குங்கள் என்பார்கள். இன்று வணிகமே உலகளவில் மாறிவருகிறது. நம்மை விட சீனாவில் குறைந்தவிலையில் தொழிலாளர்கள் பொருட்களை உருவாக்கி வருகிற நிலையில் சுதேசி பொருட்களை நாம் தயாரித்து எப்படி, எங்கே விற்பது?

பிலிப்ஸ், சோனி, சாம்சங், எல்ஜி என பொருட்களை வாங்கி வருகிறோம். திடீரென வீடியோகான், ஒனிடா என பொருட்களை வாங்குவது சாத்தியமா? இந்திய நிறுவனங்கள் பலவும் அரசின் ஆதரவில்லாத நிலையிலும், பன்னாட்டு நிறுவனங்களின் போட்டிக்கு ஈடுகொடுக்காமலும் முடங்கிப் போய்விட்டன. திடீரேன கனவு கண்டு பயத்தில் உளறுவது போல பிரதமர் மோடி பேசுகிறார். தன் நாட்டை நேசித்து அதனை காப்பாற்றுவது வேறு, மக்களை பரிவோடு நடத்துவது வேறு. ஆனால் காவிக்கட்சி இந்தியாவை கூறுபோட்டு விற்கவே முயல்கிறது. தனக்கான லாபம், கமிஷன் கிடைத்தால் போதும் என

நினைக்கிறார்கள் போல. இது அவர்களுக்கான காலம்தான். இன்னும் நிறைய அதிர்ச்சிகளை எதிர்பாருங்கள்.

உடலைப் பார்த்துக்கொள்ளுங்கள்.

நன்றி!

அ..ராமமூர்த்தி

*29.12.2017*

# 2018

## 39
## போராட்டமும், வேலையும்!

*அன்புத்தோழர் ராமமூர்த்திக்கு, வணக்கம். நலமாக இருக்கிறீர்களா ?*

சர்க்கரைப் பொங்கலை சமைத்து சாப்பிட்டு கிறக்கத்தில் இருப்பீர்கள். உங்களிடம் இருந்து படிக்க கடன் வாங்கிய இந்தியப் பொருளாதாரம் என்ற நூலை நான் படித்துவிட்டேன். அரசியல், பொருளாதாரம் பற்றிய நிறைய விஷயங்களை இந்த நூல் சொல்லுகிறது.

சென்னை புத்தகத் திருவிழாவில் சில நூல்களை வாசிக்கவென வாங்கினேன். சில நாவல்கள், சிறுகதைகள், காமிக்ஸ் என வாங்கினேன். கட்டுரை நூல்களை வாங்க மெனக்கெடவில்லை. அதனை எங்கள் இதழின் ஆசிரியரே போதும் போதுமென்ற அளவுக்கு கொடுத்துவிடுகிறார். இந்த ஆண்டு நான் கே.கே.நகரிலிருந்து தனியாக பிரிந்து மயிலாப்பூருக்கு செல்கிறேன்.

சென்னையில் படிக்கவரும்போது மயிலாப்பூரில் தங்கியிருந்தேன். சில மாதங்கள் அங்கிருந்து வேலை தேடி அலைந்தேன். பிறகு எதுவும் விளங்காமல் உடல்நலம் கெட்டு ஊருக்குத் திரும்பினேன். இன்று திரும்ப அதே ஊருக்கு சென்று மேன்ஷனில் தங்கப்போகிறேன். கையில் காசு குறைவாக இருக்கிறது. எனவே இந்த முடிவு. கே.கே.நகரில் அறைநண்பராக என்னை அனுமதித்த மெய்யருள் அண்ணாவுக்கு கல்யாணம். 36 வயதான அவர்

காதலித்து மணம் முடிக்கிறார். சந்தோஷப்படவேண்டிய விஷயம்தானே!

முதன்முதலில் அறைக்கு வந்தபோது அவர் சொன்ன கண்டிஷன் இதுதான். எனக்கு திருமணம் ஆகும்போது நீ வேறு அறை பார்த்து போய்க்கொள் என்றார். 12ஜி பஸ்ஸிலும் ஏறத்தாழ இரண்டு ஆண்டுகளுக்கு மேல் முட்டி முனகி பயணித்திருக்கிறேன். இனி எனக்கு விடுதலை.

அதுவும் நான் 12ஜி பஸ்ஸிற்கு பாஸ் எடுத்த நேரம். பேருந்து பணியாளர்கள் ஊதியப் போராட்டத்தை தொடங்கினர். இதன் விளைவாக பஸ்ஸில் மயிலாப்பூருக்கு சொகுசாக இல்லை.. அடித்துப்பிடித்துதான் செல்லவேண்டியவன். நிறைய முறை நடந்து சென்று வருகிறேன். நேரத்திற்கு பஸ் வருவதில்லை. இதை எடிட்டரிடம் எப்படி சொல்லுவது? வண்டி ஓட்டப் பழகுங்க அன்பு. நான் வாங்கித்தரட்டா? என்பார். இது தேவையா? வண்டி ஓட்டுவதில் முக்கியமான விஷயம் நாம் போய்ச்சேரும் இடம். எனக்கு இப்போது இருக்கும் நம்பிக்கைப்படி கூட இருவரை அழைத்துக்கொண்டு வைகுந்தம் செல்ல வாய்ப்பிருக்கிறதோ?

திருமணத்திற்கான பெண்களை பார்த்து வருவீர்கள். உடற்பயிற்சியை கைவிட்டு பூரிப்பில் இருக்கிறீர்கள்.

தொப்பை வளர்ந்து பேண்ட் சைசை மாற்ற நேரிடுவதற்குள் திருமணத்தை முடித்துவிடுங்கள். அப்புறம் பீர் பெல்லி என்று சொல்லி உறவுகளை சமாளித்து விடலாம்.

*நன்றி!*

*சந்திப்போம்!*

*ச.அன்பரசு*
*17.1.2018*

40

# காதலும் தீராத வலியும்!

அன்புள்ள தோழர் ராமுவுக்கு, வணக்கம்.

பேருந்து கட்டணம் உயர்கிறது. அதற்கு முன்னமே ஹீரோஹோண்டா வாங்கிய உங்களது கிராமத்து கெட்டிக்காரத்தனம் ஆசம். பஸ் டிக்கெட்டுக்கே முப்பது ரூபாய் ஆகிவிடும் போல. வருகிற பிப்ரவரி ஒன்றாம் தேதியிலிருந்து மயிலாப்பூரிலுள்ள கிரசன்ட் ஹாஸ்டலுக்கு இடம்பெயர்கிறேன். முன்னமே சொன்னது போல நண்பர் கல்யாண வீட்டுக்கு அலங்காரம் செய்து வருகிறார். அதனால் நான் அவரோடு சேர்ந்து வீட்டுக்கு சுண்ணாம்பு அடிக்கும் சூழல் உருவாகியிருக்கிறது.

முதலியார் சாதியைச் சேர்ந்தவர், செட்டியார் சாதிப்பெண்ணை காதலித்து மணம் செய்கிறார்.

இருதரப்பிலும் சற்று பூசல்கள் இருந்தன. எப்படியே சமாளித்து அனுசரித்து மெய்யருள் அண்ணன் இதனை திருமணத்தில் முடித்திருக்கிறார். அதாவது அதுவரையில் கொண்டு வந்துவிட்டார். காதலனாக பெண்ணின் மனதை வென்று அப்புறம் புருஷ சாமர்த்தியம் காட்டுவதில்தானே வாழ்க்கை இருக்கிறது. புத்தகத் திருவிழாவில் இந்திராகாந்தி பற்றிய நூல் ஒன்றை வாங்கினேன். அதைத்தான் தற்போது வாசித்து வருகிறேன்.

ஜப்பானைச் சேர்ந்த எழுத்தாளர் ஹாருகி முரகாமியின் சிறுகதைகளை தமிழ் மொழிபெயர்ப்பில் வாசித்தேன். பனிமூடிய மலைப்பகுதியில் காதலியின் கைபிடித்து நிற்பது போல இருக்கிறது இவரது கதைகளின் சூழல்கள். நகரத்தின் சலிப்புற்ற வாழ்க்கையில் இவரது நாவல்கள் சுவாரசியமாக உள்ளன. அந்த தைரியத்தில்தான் நோர்வீஜியன் வுட் என்ற நாவலைப் படித்தேன்.

32 வயதான டோரு வாட்டனபி விமானத்தில் பயணிக்கிறார். அப்போது தன் இருபது வயது வாழ்க்கையை நினைத்துப் பார்க்கிறார். கதை மெல்ல பள்ளிப்பருவத்திற்குள் நுழைகிறது. மிடோரி, நவோகோ, நவாகாடா, கிஸு என குறைந்த

கதாபாத்திரங்கள்தான். இவர்கள்தான் நாவலை வலுப்படுத்துகிறார்கள். நம்மை ஊக்கம் கொடுத்து வாசிக்க வைக்கிறார்கள்.

சிறுவயதில் சந்திக்கும் மூன்று நண்பர்கள். அதில் வாட்டனபியின் தோழனும் நவோகோவும் காதல்ன் காதலி. ஆனால் ஒருகட்டத்தில் வாட்டனபியின் தோழன் காரை புகையால் நிறைத்து அதனுள் படுத்துக்கொண்டு தற்கொலை செய்துகொள்கிறான். வாட்டனபிக்கு ஏன் அப்படி நண்பன் செய்துகொண்டான். மனதில் அப்படி என்ன துயர் என்று தனக்குத்தானே கேட்டுக்கொள்கிறான். ஆனால் அவனுக்கு எதுவும் புரிவதில்லை. பின்னர், நண்பனின் காதலி நவோகோவுடன் பழக்கம் ஏற்படுகிறது. அது உடல் உறவுவரை தொடர்கிறது.

நவோகோவின் உடலிலும், மனதிலும் இருக்கும் குறைபாடு தன் நண்பனை சோர்வுறச்செய்து கொன்றது என்பதை பின்னர்தான் வாட்டனபி உணர்கிறான். நவோகோவின் உடல்நலமும் மனநலமும் சீர்கெடுகிறது. இதன்காரணமாக அவள் சொகுசான மனநல விடுதிக்கு சிகிச்சைக்கு செல்கிறாள். இந்த நேரத்தில் வாட்டனபிக்கு கல்லூரியில் தோழி ஒருத்தி கிடைக்கிறாள். இவள் மெல்ல வாட்டனபியை நெருங்கி காதலியாகிறாள்.

அதேசமயம் வாட்டனபிக்கு நவோகோ மீதுள்ள காதல் இருப்பதால், புதிய பெண் தோழியின் உடல் உறவைத் தவிர்க்கிறான். அது தீவிர குற்றவுணர்வாக மாறுகிறது. அவன் இறுதியாக என்ன முடிவு எடுத்தான், நவோகோ உடல்நலம் தேறி திரும்பி வந்தாளா, வாட்டனபி புதிய தோழியிடம் தன் இக்கட்டான நிலையைச் சொன்னானா என்பதுதான் மீதிக்கதை. முக்கியமான பகுதியும் அதுதான்.

டிசம்பர மாத பனி பெய்கிறது. எதிரே வருபவரின் முகம் தெரியாத பனியின் நீங்கள் நடந்து செல்கிறீர்கள். உங்கள் மனம் எப்படியிருக்கும்.? இந்த நாவலைப் படிக்கும்போது எனக்கு அப்படித்தான் இருந்தது. வினோதமான மனங்கள், ஒருவரின் இயல்பு, அதனை பாதிக்கும் சூழல், இயல்பாக உடலுறவை மருந்தாக்கி மன வலிகளை கடந்துபோகும் தன்மை, இசையின் மகத்துவம், உடலை கிளர்த்தி மர்ம முடிச்சுகளை அவிழ்க்கிற அதன் தன்மை என முரகாமியின் நாவல் திகைக்க வைத்து விட்டது. அதிலும் வாட்டனபி காதலியை இழந்து கதறும் காலவெளி நம்மை பயமுறுத்துகிறது.

துறவை ஏற்கும் சமணர்கள் முடியை கொத்தாக தலையிலிருந்து பிடுங்கிப்போடும் போது

அனுபவிக்கும் வலியும், வேதனையும் எப்படியிருக்கும்? அதேபோல இந்தப்பகுதிகள் இருந்தன. தமிழில். ஆர்.சிவகுமார் மொழிபெயர்த்திருந்தார். பிரமாதம்.

உங்கள் வேலைகளுக்கு இடையில் நீங்கள் ஏதாவது நூல்களைப் படித்தீர்களா? எனக்கு கிடைக்கும் நேரங்களில் நூல்களை வேகமாக படித்துவிட தோன்றுகிறது. பார்ப்போம்.

நன்றி

சந்திப்போம்

ச.அன்பரசு
27.1..2018

41

# பிறப்பை நாம் தேர்ந்தெடுக்க முடியாது!

*அன்பரசுக்கு வணக்கம். நலமாக இருக்கிறீர்களா?*

என்னை நீங்கள் பத்தாம் வகுப்பிலிருந்து அறிவீர்கள். பொதுவாக அறிவியல் வகுப்புகளை எடுத்து படிப்பவர்களை பார்த்தாலே எனக்கு அலர்ஜி. பயங்கர மூடி டைப்பாக இருப்பார்கள். கொஞ்சம் கூட பிற மனிதர்களை மதிக்க மாட்டார்கள். அதிலிருந்து நீங்கள் மாறுபட்டு இருந்தீர்கள்.

ஆச்சரியம்தான். ஆனாலும் முதல் பார்வைக்கு அந்த கூட்டத்தில் ஒருத்தரைப் போலவே தெரிந்தீர்கள். ரைட். அப்போது நான் தள்ளுவண்டி ஒன்றில் வேலை செய்து வந்தேன். எல்லாம் காசுக்காகத்தான். காலையில் பேப்பர் போடுவது, மாலையில் கொடுமுடியில் தள்ளுவண்டிக் கடையில் வேலை பார்ப்பது. இப்படி வேலை செய்தால் மட்டுமே நான் படிக்க முடியும் என்கிற நிலை.

நிறைய முறை உங்களைப் பார்த்தே பொறாமைப்பட்டிருக்கிறேன். எனக்கு உங்கள் அப்பாவைப் போல அப்பா வாய்க்கவில்லையென்று. பெற்றோர் நாம் பிறக்கும் சாதி, நிறம் இதெல்லாம் நாம் தேர்ந்தெடுக்க முடியாது என்று பின்னர் அறிவியல் நூல்களைப் படித்து அறிந்துகொண்டேன். உணவு, அதன் மீதான விருப்பம் பற்றி எழுதியிருந்தீர்கள். என்னைப் போன்றவர்களுக்கு சாப்பிட நல்ல பண்டம் என்று வாங்கிக் கொடுக்க

யாரும் கிடையாது. கையிலும் காசு கிடையாது. கிடைக்கும்போது நிறைய சாப்பிட்டுக்கொள்வதுதான்.

நான் தள்ளுவண்டிக்கடையில் வேலை செய்வதில் கி டை த் த நன்மை, அங்கேயே சாப்பிட்டுக்கொள்வதுதான். சம்பளத்தோடு அது ஒரு லாபம். அங்கு நாங்கள் தயாரிக்கும் உணவு ஆரோக்கியம் என்று சொல்ல முடியாது. முழுக்க டாஸ்மார்க் ஆட்களை நம்பி நடத்தப்படும் கடை அது. குடல் வேகாமல் இருக்க சரக்கு அடிப்பவர்கள் அங்கு வந்து நாக்குக்கு உறைப்பாக ஒணத்தியாக எதையாவது சாப்பிடுவார்கள். நன்றாக இருக்கிறதா இல்லையா பழையதா என்று பார்க்கத்தான் அவர்களின் புத்தி திடமாக இருப்பதில்லையே. அதை வைத்துதான் அந்த கடை ஓடியது.

நான் சாப்பிட்டு விட்டு வீட்டுக்குச் செல்வேன். எங்கள் அப்பா வேலை செய்து சம்பாதிப்பதை தாமரைப்பாளையம் முச்சந்தியில் செலவழித்து விடுவார். அப்புறம் அவரை நம்பி வீட்டில் அம்மா, தங்கச்சி என இரு வயிறுகள் இருக்குமே என்ன செய்வது? நான் அதற்கு அப்போது வழி செய்துகொண்டிருந்தேன். இந்த நிலையில் வாய்க்கு ருசியான உணவை எங்கே சாப்பிடுவது?

அதனால்தான் கிடைக்கும்போது வெறித்தனமாக தின்பது. அப்புறம் உடல் எடை எகிறிவிடுகிறது. இன்றிருக்கும் நிலை பரவாயில்லை. அன்று எங்கள் ரத்தத்தை சுற்றிலுமிருந்த கவுண்டர்கள் உறிஞ்சிக் கொண்டிருந்தனர். எனக்கு அன்று என் வயிற்றில் எரிந்த பசிதான் என்னை உருவாக்கியது.

நாங்கள் வாழ்ந்த நிலைமையை மாற்றியதும் அதுதான். கமல்ஹாசன் சொன்னதாக ஒரு வாசகம் உண்டு. நான் சோற்றுக்காக வேலை செய்திருந்தால், சினிமாவில் இந்தளவு முன்னேறி வந்திருக்க முடியாது என்று. அவரது பார்வையில் அது உண்மையாக இருக்கலாம். இங்கு பெரும்பான்மையாக இருப்பவர்கள் வாழ்க்கையில் வறுமை முக்கியமான அங்கமாகத்தானே இருக்கிறது.

உங்கள் குடும்பத்தில் நீங்கள் வேறுபட்டவராக இருக்கிறீர்கள். உங்கள் சூழ்நிலையைப் போலவே அனைவரின் வீட்டுச்சூழலும் இருக்கும் என்று நினைக்கிறீர்களா என்று தெரியவில்லை. நீங்கள் என்னை சந்தித்து பேசியது நெருக்கடியான காலகட்டத்தில் எவ்வளவு உற்சாகம் தந்தது தெரியுமா? உங்கள் கடிதத்தில் எழுதிய ஒற்றை வார்த்தை எங்கெங்கோ என்னை இழுத்துச்சென்றுவிட்டது. வாசிப்பது உங்களுக்கு

மிகவும் முக்கியம். அப்போதுதானே எழுத முடியும்.

*நன்றி !*

*அ.ராமமூர்த்தி*
*31.1.2018*

42
# தலைக்கு மேல் கூரை தேவை!

அன்பு நண்பர் ராமுவுக்கு, வணக்கம். வேலை ஒழிந்த நேரத்தில் கடிதத்தை படிப்பீர்கள் என நம்புகிறேன். தங்குவதற்கான இடத்தை, தலைக்கு மேல் கூரையை தேடுவது என்பது பெரிய வேலை. மனச்சோர்வை எளிதில் உண்டாக்குவதும் கூட

நானும் இன்னொரு நண்பரும் தங்குவதற்கான இடம் தேடினோம். ஆனால் அவர் திருமணம் செய்து மனைவியுடன் தங்குவதற்கான இடத்தை தேடுகிறார் என பிறகே தெரிந்துகொண்டேன். சில இடங்களில் வேகமாக பதில் சொல்லவும், சில கருத்துகளை அவர் வெளிப்படையாக சொல்லுவார் என அவரை கூட்டிப்போனது பெரும் குழப்பமாகி போனது. நான் மேன்ஷனில் இடம் தேடினால், அதே இடத்தில் அவர் வீடு தேடும் முயற்சியில் இ ரு ந் தா ர் . என்னைவிட அதிக சம்பளம் வாங்குகிறவர், அப்படி முயல்வது பிரச்னையில்லை. மயிலாப்பூரில் வீடு தேடும் அவரது எண்ணமும், அதற்கான பட்ஜெட்டும் எனக்கு பயங்கர குழப்பத்தைத் தந்தது.

ஒரு கட்டத்தில் நான் அவரிடம் ”நீங்கள் எனக்கு உதவி செய்வீர்கள் என்றுதான் கூட்டி வந்தேன். உங்களுக்கு மனைவியுடன் தங்குவதற்கான வீடு வேண்டுமென்றால் தனியாக தேடிக்கொள்ளலாம். அதற்கு தனியாக ஆட்கள் இருக்கிறார்கள்” என்று சொல்லிவிட்டேன். பின் அவரை முண்டகக்கண்ணி அம்மன் கோவில் ஆர்ச் அருகிலுள்ள சேட்டா ஜெகன் அண்ணாவிடம் அழைத்துச் சென்றேன். ஆனால் டீக்கடைக்காரரர் சொன்ன பட்ஜெட்டில் நண்பர் நம்பிக்கையின்றி இருந்தார். பிறகு அவர் தன்

வாயாலேயே நான் கோயம்பேடு அருகே வீடு பார்த்துக்கொள்கிறேன் என்று ஒருவழியாக முடிவுக்கு வந்தார்.

அவர் அப்படி முடிவுக்கு வந்து சொன்னது, அப்பாடா என்று இருந்தது. நான் தங்கியுள்ள அறையில் இருப்பவர்கள் அந்த அறைக்கு சொந்தக்காரர்கள் போல தெரிந்தார்கள். குறுக்கும் மறுக்குமாக கட்டில்களை போட்டு இருந்தார்கள். எப்படி அதில் தங்கியிருந்து நம் வேலைகளை செய்வது என்று எனக்கு ஏதும் புரியவில்லை. வேறுவழியில்லை சமாளிக்க வேண்டியதுதான். விழித்துக்கொண்டே கனவு காண்பது போல இருக்கும் நிலை இனி கைகூடாது. அறையில் எப்போது மின் விளக்கு எரிவது என்பது கூட நம் கட்டுப்பாட்டில் இல்லை. அதற்கு அறை உறுப்பினர்களின் ஒப்புதல் பெறவேண்டும். குளியறையில் இருந்தால் கூட உள்ளே வருபவர்களுக்கு உடனே கதவு நீக்கிவிடவேண்டும் என்பது சமீபத்திய எரிச்சலாக இருக்கிறது.

அலுவலகத்தில் ஆசிரியரின் க டு ம் முயற்சியால் சனிக்கிழமை விடுமுறை அளிக்க நடவடிக்கை எடுக்கப்பட்டது. ஆனால் பல்வேறு துறையினர் அதனை மறைமுகமாக எதிர்த்தனர். அவர்களின்

கோள்மூட்டல்களால் விடுமுறை நடவடிக்கை உடனே வாபஸ் பெறப்பட்டுவிட்டது.

எனக்கு உங்களை போன் செய்து அழைப்பதை விட கடிதங்கள் எழுவது சரியாகப்படுகிறது. அவசரத்திற்கு போன் செய்கிறேன். படித்தால் படிக்கலாம். இல்லையெனில் எழுத்தாளர் ஸ்ரீராம் போல சிரித்துக்கொண்டே கிழித்து எறிந்துவிட்டு, அடுத்த சோலியைப் பார்க்கலாம். அரசியல் பொருளாதாரத்தின் இளமைக்காலம் என்ற நூலைப் படித்து வருகிறேன்.

*நன்றி!*

சந்திப்போம்.

*ச.அன்பரசு*
*5.2.2018*

43

# காதல் குரு!

அன்புத்தோழர் ராமுவுக்கு, அன்பரசு எழுதுவது.

நலமாக இருக்கிறீர்களா?

இரவுகளில் சொந்தக்கரங்களில் சொர்க்கம் தொட்டு மீளும் உங்களுக்கு இத்தனை பிரச்னைகளா? நீங்கள் போனில் அழைத்துப் பேசியதைத் தான் சொல்கிறேன். ஆச்சரியமாக இருக்கிறது. இந்த விவகாரத்தை சிறித நாட்கள் கழித்து பெண்களின் பெயர்களை மாற்றி சொன்னால் அப்படியே புத்தம் புதிதாக இருக்கிறது என்று கேட்டு நம்பிவிடுவேன். அதுதான் என்னுடைய ஞாபகசக்தி.

அந்தரங்கமான காதல் சிக்கல்களுக்கு ரேடியோவில் வரும் ரகசிய ஸ்னேகிதி தீர்வு சொல்லலாம். மற்றவர்களுடைய காதல் கதைகளை கேட்டு வரும் என்னிடம் என்ன தீர்வு இருக்கும் என எதிர்பார்க்கிறீர்கள்.

உங்களது ஒப்பீனியன் மாறுவது சரி. ஆனால் லட்சியத்தை சீசனுக்கு சீசன் மாற்றினால் எப்படி? எனக்கு நீங்கள் சொல்லும் காதல் ரகசியங்களை, சாகசங்களை நீங்கள் முழுக்க பேசி முடித்தபிறகு அரைமணி நேரத்திற்கு பிறகுதான் புரிகிறது. உங்களின் தடுமாற்றத்தை பெண்கள் எப்படி புரிந்துகொள்வார்களோ?

ஆனால் தங்கள் வாழ்க்கையை சரியாக தேர்ந்தெடுப்பதில் அவர்கள் புத்திசாலிகள்தான். கைத்தொழில் மன்னராக உங்களின் சாகசங்கள் அனைவருக்கும் பொருந்தக்கூடியது அல்ல. இன்று நான் மயிலாப்பூரிலுள்ள கிரசன்ட் ஹாஸ்டலில் முறையாக இணைந்து விட்டேன். பணம் பாக்கி 5,500 ரூபாய் கட்டவேண்டியிருக்கிறது.

விடுதி அறையில் புது இடம் என்பதாலோ என்னவோ தூக்கம் வரவில்லை. முடிந்தளவு அறையில் இல்லாமல் இருப்பது நன்றாக இருக்கும்

என நினைக்கிறேன். அறையில் உள்ளவர்கள் படித்துக்கொண்டிருக்கிறார்கள். நானும் இன்னொருவரும் மட்டுமே வேலைக்குச் செல்கிறோம். இரவில் வேலைபார்த்துவிட்டு பகலில் தூங்குபவர் ஒருவர் இருக்கிறார். அதிகாலை எழுந்து படிப்பது என்பது வேலைக்கு ஆகாது போல. இங்கு எழுவது, படிப்பது ஆகியவற்றுக்கான வாய்ப்பு குறைவு. ஆழமான இருளில் அறை வெளவால்கள் துயில் கொள்ளும் குகை போல தோற்றமளிக்கிறது.

*நன்றி!*

*சந்திப்போம்!*

*அன்பரசு*
*5.2.2018*

44

# சூரியனாக உதித்த கலைஞர்!

*அலைபேசி வழியாக....*

*ஹலோ அன்பரசு எப்படி இருக்கீங்க.. நல்லா இருக்கீங்களா.. நான் ஊருக்குப் போய்விட்டு வந்தேன். ஊரில் அம்மா இருக்கிறார்கள்.*

அவர்களின் சொந்தக்காரரர்கள் அருகிலேயே பாதுகாப்பாக இருக்கிறார்கள். கருத்திபாளையம் போல ஒவ்வொன்றுக்கும் சடவு ஒன்றும் இல்லை. எனக்கு அம்மாவுக்கு தொழுநோய் பாதிப்பு வந்து நீங்கியதுதான் பெரும் பதற்றத்தை ஏற்படுத்தியது. எப்படியோ அரசு மருத்துவமனைகளின் சுணக்கங்களையும் தாண்டி அவர்களை மருந்து கொடுத்து குணப்படுத்தியது மகிழ்ச்சி.

முக்கியமான மருந்துகளை கிராமப்புறங்களுக்கு அனுப்பி வைக்காமல் அரசு சுணக்கம் காட்டியது. இம்மருந்துகளை ஒரு கட்டத்தில் சாப்பிடாமல் நிறுத்திவிட்டால் மீண்டும் நோய் பாதிப்பைக் கட்டுப்படுத்த முடியாது. வேலை எப்போதும்போல மேலதிகாரிகளுடன் உரசலும் உடன்பாடுமாக செல்கிறது. நான் என் வேலையை சரியாக செய்வதற்காகவே துறைசார்ந்த நூல்களைப் படித்து வருகிறேன். அவற்றை முடிந்தவறையில் அமல்படுத்தி வேலை செய்யப்போகிறேன். தெற்கிலிருந்து ஒரு சூரியன் நூலைப் படித்து வருகிறேன். ஆம். கலைஞரைப் பற்றியேதான்.

முதுபெரும் தலைவரான கலைஞரைப் பற்றி தமிழ் இந்து நாளிதழ் வெளியிட்ட நூல் இது. திராவிட கழகம் கொள்கைகளைப் பற்றி பேசினாலும்

அவற்றை நடைமுறைப்படுத்த முயன்றது திமுகதான். அதில் நிறை குறை இருக்கலாம். இன்று சமூகநீதிக்கான குரலாக இருப்பது திமுக என்ற ஒரு கட்சிதான்.

கலைஞர் பற்றிய பல்வேறு கட்டுரைகளை எழுத்தாளர்கள் எழுதியுள்ளனர். இதில் பேட்டிகளும் உண்டு. இவை தமிழ் இந்து நாளிதழில் நடுப்பக்கங்கள் வெளியிடப்பட்டன. நீங்கள் வாசித்திருக்க வாய்ப்புண்டு. தாழ்த்தப்பட்ட சாதியிலிருந்து வந்து தேர்தலில் வென்று முதல்வராவது இந்திய சமூகத்தில் சாதாரண விஷயமல்ல. வேலைவாய்ப்புகளில் ஏற்றத்தாழ்வு இருந்தாலும் எனக்கு கிடைத்திருக்கிற கல்வி என்பது இவர்களைப் போன்ற தலைவர்களின் உழைப்பினால் விளைந்தது. அதேசமயம் சிறு சிறு சாதிக்கட்சிகளை வளர்த்துவிட்டு சமூகத்தில் பதற்றத்தை ஏற்படுத்திய பெருமையும் இவரையே சாரும். முதலில் கொள்கை என்று பேசி அதற்காக பாடுபட்டு பின்னாளில் சூ.ழலுக்கு ஏற்பட பாப்புலிச தலைவரானார். அவரின் தமிழ், திரைப்பட பணி, பொதுவாழ்க்கை என சுவாரசியங்களை பல்வேறு எழுத்தாளர்கள் வெளிப்படுத்தியுள்ளனர். சுவாரசியமான நூலாக வெளிவந்துள்ளது. வாய்ப்பிருந்தால் நீங்களும்

படியுங்கள் அன்பு.

*நன்றி !*
*அ.ராமமூர்த்தி*

*10.2.2018*

45

# பாரதி மெஸ் சாப்பாடும் வாழ்க்கையும்!

அன்புத்தோழர் ராமமூர்த்திக்கு வணக்கம். நலமாக இருக்கிறீர்களா?

என்னிடம் நீங்கள் யோசனை கேட்பது ஓர் நண்பராக எனக்கு பிடித்திருக்கிறது. ஆனால் இறுதியான முடிவை நீங்கள்தான் எடுக்கவேஎண்டும். உங்களை விட உங்களுக்கு நெருக்கடி காலத்தில் யாருமே உதவ முடியாது. பிரச்னை உங்களுடையது. அதைத் தீர்க்கும் செயல்பாடும் உங்களுடையதுதான். காலம் தலையில் எமல்ஷன் பெயிண்டை அடிக்கும் முன்பு முடிவெடுத்து விடுங்கள். ஸ்மார்ட் ரேஷன் கார்டுக்கு உலகமே மாறிக்கொண்டிருக்கிறது. நாம் தாள்களை ஒளித்து சேர்த்து வைக்கும் காலத்தை கடந்து வந்துவிட்டோம்.

தற்போது நான் தங்கியுள்ள விடுதியில் பிரதீப் என்ற நண்பர் கிடைத்திருக்கிறார். நெய்வேலியைச்

சேர்ந்தவர். ஜெர்மன் மொழியைக் கற்று வருகிற மாணவராம். முன்னர் இங்குள்ள மாமி மெஸ்ஸின் மேலுள்ள விடுதியில் தங்கியிருந்திருக்கிறார். வாயைத் திறந்தால் அவராக மூடினால்தான் உண்டு,. எப்படி வந்து சிக்கியிருக்கிறேன் பார்த்தீர்களா? நாம் கொடுக்கும் ரியாக்சன்களுக்கும் அவரே டப்பிங் பேச தயாராக இருக்கிறார்.

இங்குள்ள மனிதர்கள், அறையின் நிலை அனைத்துமாக சேர்ந்து மனதில் மனநல சிக்கல்களை ஏற்படுத்திவிடும் போல. அப்படி இருக்கிறது அறை. கறுப்பு அடிமைகளின் கதை என்ற நாவலைப் படித்து வருகிறேன். வான் முகிலன் என்பவர் தமிழில் மொழிபெயர்த்திருக்கிறார். அங்கிள் டாம் கேபிள் என்ற புகழ்பெற்ற ஆங்கில நூலின் மொழிபெயர்ப்பு இது. வளவளவென்று இவரது தமிழ்மொழிபெயர்ப்பு படிக்கும்போதே சிவ சிவா! சொல்ல வைக்கிறது.

கபாலீஸ்வரர் கோவில் அருகே உள்ள பாரதி மெஸ் சாப்பாடும், மத்தளநாராயணன் தெருவில் ஜெயின் கோவிலருகே உள்ள செந்தில்நாதன் மெஸ்ஸின் சப்பாத்தியுமாக வாழ்க்கை ஓடுகிறது.

*4.2.2018* அன்று கே.கே.நகர் மெய்யருள் அண்ணாவின் திருமணம் நடைபெற்றது.

திருவான்மியூரில் உள்ள மருந்தீஸ்வரர் கோவில் அருகேயுள்ள சிறிய கோவிலில் நடைபெற்றது. மணப்பெண்ணும், அவரின் வீட்டாரும் வித்தியாசமாக இருந்தார்கள், என மனதிற்கு அவர்க்ள வேண்டாவெறுப்பாக கல்யாணத்திற்கு ஒத்துக்கொண்டது போல தெரிந்தது. சாப்பாடு போட்டது மிகவும் அமெச்சூர்தனமாக இருந்தது. சாப்பாட்டை இத்தனை என்று எண்ணி வந்து சோறு போட்டிருந்தால் கூட பிரச்னை இல்லை. காசுகொடுத்து சாப்பிடுபவர்களும் உள்ளே விட்டு, கல்யாண சாப்பாடு சாப்பிட வந்தவர்களையும் உள்ளே விட்டு ஒரே குழப்பமாகிவிட்டது.

சர்வர்கள் டோக்கன் எங்கே என்று கேட்டு துளைத்தெடுக்க, எனக்கு இதென்னடா ஈரோட்டுக்காரனுக்கு வந்த சோதனை? என்று தோன்றியது. கல்யாண சோற்றுக்கு டோக்கன் வாங்கவேண்டும் என்பது புதிதாக இருந்தது. மெய்யருள் அண்ணன் மொய் வாங்கித்தான் அந்த காசில் சோறு போடுவார் போல நினைத்தேன். அங்கு சூழல் பற்றி எழுதும் சுபவனம் என்பவரையும், காடு இதழ் ஆசிரியர் ஏ.சண்முகானந்தத்தையும் பார்த்தேன். மகிழ்ச்சியாக இருந்தது. மெய்யருள் அண்ணனிடம் விடைபெற்றுக்கொண்டு வந்துவிட்டேன்.

அண்ணனின் வாழ்க்கை ஒருவழியாக டிராக்கில் ஓடும் ரயில் வண்டியாகிவிட்டது.

*நன்றி!*

*ச.அன்பரசு*
*6.2.2018*

46

# காசைக் கொடு!

அன்புத்தோழர் ராமமூர்த்திக்கு, வணக்கம். நலமாக இருக்கிறீர்களா?

தங்களின் காதல் அனுபவங்கள் கேட்க நன்றாக இருக்கிறது. பின்னாளில் இதையெல்லாம் வைத்து வா.மு.கோமு போல கசமுசா கதைகளை பின்னாளில் நான் எழுதக்கூடும். ஆனால் உங்களது ஏராளமான காதலிகளை அவரா, இவரா என்று நினைவில் நிறுத்துவது கடினமாக இருக்கிறது.

மெய்யருள் அண்ணாவின் கல்யாண வரவேற்பு அவரது ஊரில் நடக்கிறது. நான் அவர் தாலிகட்டுவதை இங்கேயே பார்த்துவிட்டேன். எனவே, நான் ஊருக்கு வரமாட்டேன் என்று முன்னமே சொல்லிவிட்டேன். எனக்கு கூட்டம் ஆகாது. எனவே அவரது வீட்டினர், மண்ணின் மைந்தர்கள் ஒன்றுகூடி வாழ்த்தி வாழ்வாங்கு வாழ்த்தியிருப்பார்கள். நன்றாக வாழ்ந்தால் சரி.

மேன்ஷன் அறையில் ராம்குமார் என்பவர் மருத்துவர், நீட் தேர்வுக்கு முக்கி வருகிறார். இன்னொருவர் இன்சோம்னியா விவேக். எப்போது தூங்குகிறார் என்றே தெரியாது. திடீரென எழுந்து

குளித்துவிட்டு ரயிலுக்கு ஓடுவார். அறையில் அதிக நாட்கள் தங்கியிருந்தவர் போல. தன்னுடைய வீட்டின் அறையைப் போலவே மேன்ஷன் அறையை கருதுகிறார். ரூம் பராமரிப்புக்கு வாடகை இல்லாமல் 1,500 ரூபாய் தரவேண்டுமாம். முஸ்லீம் ஆட்கள் விடுதியை நடத்துகிறார்கள். இரக்கம் இன்றி தூங்குபவனை எழுப்பி காசைக் கொடு என்கிறார்கள். என்ன மனிதர்களோ?

நேர்மை என்பதற்கு நகரங்களில் இளிச்சவாய்த்தனம் என்று பெயரோ என்று எனக்கு சந்தேகமாக இருக்கிறது. நகரங்களுக்கு வேலை தேடி வருபவனை தினசரி வங்கியைக் கொள்ளையடித்து வருபவனைப் போலவே நினைக்கிறார்கள். நமக்கு மட்டும் பணம் எங்கிருந்து வருகிறது? சீக்கிரம் வேறு இடம் பார்த்து போகலாம் என்றால் அலுவலகத்தில் சம்பளத்தை ஏற்றும் முனைப்பே தெரியவில்லை.

கறுப்பு அடிமைகளின் கதை நூலை துக்கம் தொண்டையடைக்க படித்து வருகிறேன்.

நன்றி

ச.அன்பரசு
8.2.2018

47

# உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தணும்!

அன்புத்தோழர் ராமுவுக்கு, வணக்கம்.

தாய்மண்ணில் காற்று வாங்கிவிட்டு வந்திருப்பீர்கள். பெரும்பேறுதான் இது. நமக்கு பிடித்தவர்கள் அருகிலிருக்கும்போதுதானே சந்தோஷம் கிடைக்கும். உங்களது அனுபவம், மகிழ்ச்சி எனக்கு சற்றே பொறாமையைக்கூட தருகிறது. வெளிப்படையாக சொல்லிவிட்டேன். தவறாக நினைத்துக்கொள்ளாதீர்கள்.

எங்கள் வார இதழில் ரிப்பேர் கஃபே என்ற கட்டுரையை மொழிபெயர்த்து எழுதினேன். அனேகமாக அது லிவ்மின்ட் பத்திரிகையில் வ்ந்த கட்டுரை என்று நினைக்கிறேன். ரிப்பேர் கஃபே என்பது பெங்களூருவில் உள்ள நிறுவனம். விரைவில் சென்னையில் தங்களின் கிளை ஒன்றை திறக்கவிருக்கிறார்கள். அந்த நிறுவனம் சமூகம் சார்ந்த முன்னேற்றத்திற்காக பாடுபடும் அமைப்பு. அதை எழுதிய சில நாட்களுக்குப் பிறகு

அலுவலகத்திற்கு போன் வந்தது. போனில் ஆங்கிலமும் , தமிழுமாக ஒரு அம்மணி பேசினார். என்ன பேசினார் என்பதே பாதி புரியவில்லை.

பெங்களூருவிலுள்ள நிறுவனத்தைப் பற்றி தமிழில் ஏன் எழுதுகிறீர்கள். போலீசில் புகார் பண்ணுவேனாக்கும் என்றே பேசினார்கள். எனக்கென்றே எங்கிருந்து வருகிறார்களோ என்று நினைத்தவன், தாராளமாக புகார் செஞ்சுக்கோங்க என்று சொல்லிவிட்டு போனை வைத்துவிட்டேன்.

என்னுடைய நடத்தையை எடிட்டர் கே.என்.சிவராமன் கடிந்துகொண்டார். உணர்ச்சிகளை கட்டுப்படுத்தணும்ப்பா.. இப்படியா தடால்னு பேசறது என்றார். பெண்கள் என்றால் எனக்கு லைன் கொடுங்க, நான் அனுசரிச்சு பேசிக்கிறேன் என்கிறார் உதவி ஆசிரியர் த.சக்திவேல். எனக்கு வருகிற ஆட்கள் ஹிஸ்டீரியா நோயாளிகள் போலவே வந்தால் என்னதான் செய்வது? என் நடத்தைக்கு நான் ஆசிரியரிடம் சென்று மன்னிப்பு கேட்டுக்கொண்டேன்.

கறுப்பு அடிமைகளின் கதை நூல் இன்னும் நீண்டுகொண்டே போகிறது. அடிமைகள், இரக்கமின்றி நடத்தும் முதலாளிகள், வல்லுறவு, சித்திரவதை, கிறிஸ்துவ பிரசாரம், அடிமைகளின்

குடும்பம், பிரிக்கப்பட்ட அம்மா, மகள் பாசம், பரிதவிப்பு என உணர்ச்சிகரமான காட்சிகள் ஏராளமாக உள்ளன. இந்தி நடிகர் அக்ஷய் குமாரின் செய்திகளும், படங்களும் ஒரு மாதிரியாக மாறிவிட்டன. பேடுமேன்,. கோல்டு என நடிக்கும் படங்கள் அனைத்தும் அரசை பாராட்டுவதாகவே இருப்பதாக உணர்கிறேன். அவரவர்க்கு அவரவர் எதிர்காலம் முக்கியம்தானே?

*நன்றி!*

*ச.அன்பரசு*
*10.2.2018*

## 48
# பரிசுத்த ஆவியும், பெருமாளின் முகமும்!

அன்புத் தோழர் ராமுவுக்கு வணக்கம்.

நலமாக இருப்பீர்கள் என நம்புகிறேன். இந்த ஆண்டு முழுவதும் எனது கண்ணில் பரிசுத்த ஆவி இயேசுவின் சுவரொட்டிகள் கண்ணில் பட்டுக்கொண்டே இருக்கின்றன. அதில் உள்ள தமிழ் வார்த்தைகள் என்னை வசீகரப்படுத்தி வருகின்றன. தமிழில் இயேசு பற்றி எழுதும் எழுத்துகள் படிக்க

நன்றாக இருக்கின்றன.

தினசரி எனது காலை என்பது ஐந்து மணிக்கு தொடங்குகிறது. காலை எழுந்து குளித்துவிட்டு 5.50க்கு டீ குடிப்பேன். சேட்டா ஜெகன் துப்பாக்கித் தோட்டா போல, நான்கு மணிக்கே படாரென கடையை திறந்துவிடுவார். அவர் போடும் டீ நன்றாக இருக்கும். பிறகு ஆறுமணிக்கு நடை திறந்தால் மாதவ பெருமாள் கோவிலுக்கு போய்விடுவேன். அங்கே உட்கார்ந்து அன்றைக்கு எழுத வேண்டிய விஷயங்களை திட்டமிட்டுக் கொள்வேன். பிறகு எழுந்து கச்சேரி ரோட்டுக்கு வந்து கேரளத்துக்காரரின் கடையில் இட்லி வாங்கிக்கொண்டு ஆபீஸ் செல்வேன். அடுத்து வேலை முடிந்து அறை திரும்ப இரவு எட்டுமணி ஆகும்.

அறை நண்பர்களில் மூத்தவர்கள் நானும் விவேக்கும்தான். இயல்பாகவே ஏனோ கதிர்வீச்சுக்கு கட்டப்பட்ட சுவர் போல எங்களுக்கு இடையில் தடை இருக்கிறது. கடக்கவே முடியவில்லை. அதுவும் தவிர வெவ்வேறு வட்டார வழக்கு ஆட்கள் வேறு. குழப்பத்திற்கு கேட்கவா வேணும்? இயல்பாக பேசினாலே நான் பிறரை நக்கலடித்து விடுகிறேன் என புகார்கள் வருகின்றன. என்ன செய்வது?

காலசர்ப்பம் விடாது தொடர்ந்து துரத்துகிறது.

வட்டாரத்திற்கு கள ஆய்வு என்று சொல்லி காதல் ஆய்வுகளை நீங்கள் செய்துகொண்டிருப்பதாக வதந்தி. என்னமோ தெரியவில்லை. இட்லி, கல்தோசை, சப்பாத்தி தவிர வேறு எதுவும் என் கனவில் கூட வருவதில்லை. என்பது துர்பாக்கியம்தான். ஆண்டவர் என்னை விரைந்து பரிசுத்த ஆவியால் சொஸ்தப்படுத்துவார் என நம்புகிறேன்.

நீங்கள் ஏதேனும் புதிய நூல்களை வாசித்தீர்களா? வயிறு புடைக்க சாப்பிட்டு தூங்கத்தான் நூல்களை தேடுகிறீர்களா என்று தெரியவில்லை. ஆம்லெட் சாப்பிடும்போது மிளகு சேர்த்து சாப்பிடுங்கள். சளி பிடிக்காது. பாருங்கள் தினகரன் துண்டு துணுக்கெல்லாம் உங்களுக்கு கடிதம் எழுதும்போது வந்து விழுந்து தொலைக்கிறது?

நன்றி

ச.அன்பரசு
10.2.2018

49

# சென்னையில் ஓர் இரவு!

அன்புத்தோழர் அன்பரசுவுக்கு வணக்கம். நலம். நலம் நாடுகிறேன்.

உங்களது அறை நண்பருக்கு திருமணம் செய்ய ஒத்தாசை செய்தீர்கள் சரி. நீங்கள் எப்போது திருமணம் செய்யப்போகிறீர்கள். நாங்களும் கறிச்சோறு சாப்பிடவேண்டாமா?

நீங்கள் உங்கள் நண்பரின் திருமண விருந்தைப் பற்றி எழுதியதை படித்து சிரித்து வயிறு வலித்தது. டோக்கன் கேட்டபோது உங்களின் திருதிரு முழியை நினைத்து பார்த்தேன். உம். இப்படியும் திருமணம் செய்கிறார்கள் நகரங்களில் என நினைத்துக்கொண்டேன். காதல் திருமணம் என்று வேறு சொன்னீர்கள். சில தடுமாற்றங்கள் இருக்கத்தான் செய்யும்.

இப்போது உறவு என்பதில் ஆண்கள் முடிவெடுப்பதில்லை. பெண்கள்தான் முடிவெடுக்கிறார்கள். ஆனால் எல்லாமே ஆண்கள் முடிவு செய்வது போல காட்டிக்கொண்டு பின்னாடி இருந்து சாவி கொடுப்பார்கள். அனேகமாக இந்த

திருமணம் நடந்தது முழுக்க அந்த பெண்ணின் வற்புறுத்தலாகவே இருக்கும். காரணம், இந்த சம்பவங்களை பார்த்தால் அப்படி யோசிக்க தோன்றுகிறது.

புதிய அறை, அதிலுள்ள மனிதர்களைப் பற்றி சொல்லியிருந்தீர்கள். உங்களைப் போல கூட்டமாக உள்ள மனிதர்களைப் பார்த்தால் அங்கிருந்து வெளியேறுகிற குணம் இருந்தால், சென்னையில் தங்கியிருப்பது கடினம்தான். எனக்கு செனைனயில் தேர்வு எழுத வந்தபோது கையில் ஹோட்டலில் தங்குமளவு காசில்லை. அதனால் கோயம்பேடு பஸ் ஸ்டாண்டில் ஒரு திண்ணையைப் பிடித்து அட்டைப் பூச்சியைப் போல சுருண்டிருந்தேன். சரியாக அங்கே ஒரு போலீஸ்காரரர் வந்து லத்தியால் அடித்து என்னை எழுப்பி வேறிடம் போகச்சொன்னார். மறக்க முடியாத அனுபவம் அது.

ஏனெனில் தூங்குபவர்களை பொதுவாக நம் ஊரில் எழுப்பவே தயங்குவோம். காரணம், அது மரியாதைக்குரிய ஒன்றல்ல. ஒருவன் கவலைகளை மறந்து நிம்மதியாக இருப்பதே தூங்கும்போதுதான் அல்லவா? மனிதர்களின் உள்ளே எப்போதும் பழைய மிருகம் ஒன்று தூங்கிகொண்டுதான்

இருக்கிறது. அன்பு எந்தளவு இருக்கிறதோ, மறுபக்கத்தில் அந்தளவு குரூரமும் வக்கிரமும் இருக்கிறது.

உங்கள் கட்டுரைக்காக போன் செய்து அம்மணி பேசியதை பகிர்ந்து இருந்தீர்கள். விநோதமான பதிவு அது. பொதுவாக உங்கள் பேச்சில் தொனிக்கும் ந க் க லை சிலசமயங்களில்தான் எழுத்தில் கொண்டுவருகிறீர்கள்.

நிறையமுறை உங்களின் இயல்பான நக்கலும் நையாண்டியுமான எழுத்தை நீங்கள் கைவிட்டு, சீரியசாக எழுதுகிறீர்கள். இப்படி வறட்சியாக தகவல்களுடன் எழுத திராவிட எழுத்தாளர்கள் பலர் இருக்கிறார்கள். ஆனால் நீங்கள் அப்படி ஏன் எழுதவேண்டும்?

விமர்சனங்களுக்கு பதில் சொல்ல வேண்டும் என்பதில்லை. ஆனால் உருப்படியான விஷயங்கள் ஏதேனும இருந்தால் அதனை கவனிக்கலாம். தவறில்லை. உங்கள் மூக்கு புடைப்பாக இருப்பதால் திடீரென கோபப்பட்டு விடுகிறீர்கள். பத்திரிக்கையாளர்களாக இருப்பவர்கள் இப்படி உடனே தோள்களை உயர்த்தினால் என்னாவது? பேச்சின் தொனி ஒருவரை சந்தோஷப்படுத்தலாம், அல்லது அவரை கோபப்படுத்தலாம். அனைத்துக்கு

வாய்ப்பு உள்ளது. ஆனால் உங்கள் எடிட்டர் இதற்கு சொன்ன பதில் அவரது அனுபவத்தைக் காட்டுகிறது.

நீங்கள் தொடர்ச்சியாக வாசிப்பதையும், அதை என்னிடம் பகிர்வதும் மகிழ்ச்சியாக இருக்கிறது.

*நன்றி !*

*அ.ராமமூர்த்தி*

*14.2.20118*

## 49
# திருத்த திருத்த செம்மை!

அன்புத் தோழருக்கு, வணக்கம். நலமாக இருக்க இறையைத் தொழுகிறேன்.

இக்கடிதம் உங்களை வந்தடையும்போது, நம்மவர் கமல்ஹாசன் கட்சியைத் தொடங்கியிருப்பார். அவரின் அத்யந்த ரசிகரான நீங்களும் கொள்கைகளைப் படித்து குஷியாகி இருப்பீர்கள். விகடன் கமல்ஹாசனுக்கான சிறப்பான புரோமோ விஷயங்களைச் செய்து வருகிறது. புத்தகமும் விற்கவேண்டும். அதையும் நான்கு பேர் வாங்கவேண்டும் என்ற நிர்பந்தம் அவர்களுக்கு இருக்கிறது.

ஸ்டீவ்ஜாப்ஸ் வழி என்ற ஜெய்கோ பதிப்பக நூலைப் படித்து வருகிறேன். சுயமுன்னேற்ற நூல் அல்ல. ஸ்டீவ் எப்படி ஆப்பிள் கம்பெனியை உருவாக்கினார் என்பதை எழுத்தாளர் ஜெ.எலியட் எழுதியுள்ளார். ஆப்பிள் நிறுவனம் இன்றும் சந்தையில் நிற்பதற்கான விதைகளை தூவியர் ஸ்டீவ் ஜாப்ஸ்தான். எப்படி சாதித்தார் என்பதை நூல் பேசுகிறது.

இரு நாட்களுக்கு முன்பாக திருவண்ணாமலை சென்றேன். நிம்மதி தேடித்தான். கந்தாஸ்ரமம் வரை மலை ஏற வைத்துவிட்டார்கள் ஆருயிர் நண்பர்கள். இத்தனைக்கும் வெளிநாட்டுக்காரரர் ஒருத்தருக்கு

எடுபிடியாக. நான் அங்கு போட்டுச்சென்றது சட்டையும் பேண்டும். ஆபீஸ் போவது போலவே போய் மலை ஏறி வந்தேன். எதற்கு அங்கு சென்றோம் என்று ஆகிவிட்டது. உடல் கடுமையான வலியால் துடித்துவிட்டது. இவர்களுக்கு வெள்ளைக்காரனால் காரியம் ஆகணும் என்றால் அவர்களை நேரடியாக அணுகவேண்டும். நம்மைக் கூட்டிக் கொண்டுபோய் சாகடித்தால் எப்படி?

அலுவலகத்தில் பணிபுரியும் ஓவியம் மற்றும் லே=அவுட் நண்பர் கதிரவன் விரைவில் அண்ணாசாலையில் உள்ள பத்திரிகை ஒன்றுக்கு பணி மாறவிருக்கிறார். கடுமையான உழைப்பாளி. ஆனால் இங்கு அவரை சரியாக பயன்படுத்த லே அவுட் தலைவரே அனுமதிக்கவில்லை. அவர் தன்னுடைய பயிற்சி காலத்தை இந்த நிறுவனத்தில் முடித்துவிட்டு வேறு நிறுவனத்திற்கு அப்ளை செய்து போய்விட்டார். அரசியல் பொருளாதார நூலில் ஆடம் ஸ்மித்தின் செல்வம் வரை படித்துள்ளேன். இன்னும் இருநூறு பக்கங்கள் முழுதாக உள்ளன. அதை விரைவில் படித்துவிடுவேன்.

வா ர இதழில் கட்டுரைகளை எழுதிக்கொடுத்து விட்டு நின்றுவிடுகிறேன். இப்போது அதை சிலர் நிறைய திருத்தங்கள் செய்கின்றனர். பின்னர்,

கட்டுரை வெளியாகிறது. திருத்த திருத்த செம்மை என்கிறார் எழுத்தாளர் நஞ்சுண்டன். அவரை நம்புகிறேன்.

நன்றி!

*ச.அன்பரசு*
*22.2.2018*

50

# டிஜிட்டல் பாய்ச்சல்!

*அன்புத்தோழர் ராமமூர்த்திக்கு, வணக்கம். நலமாக இருக்க வாழ்த்துகிறேன்.*

*திருமணம் சார்ந்த விஷயங்களை வேகமாக செய்துகொண்டிருப்பீர்கள் என நம்புகிறேன். விகடனில் கமல் எழுதிய தொடர், 22 அத்தியாயங்களோடு முடிவுக்கு வந்துவிட்டது.*

*தான் பேச வேண்டியதை எல்லாம் பேசிவிட்டார் என்பதோடு அதற்கான வாய்ப்பையும் விகடன் பயன்படுத்திக்கொண்டது. கமலின் லோகோ பார்த்திருப்பீர்கள். நான்கூட ஏதாவது வங்கி தொடங்கப்போகிறாரோ என்று நினைத்தேன். கூட்டுறவு வங்கிகளில் இப்படித்தானே லோகோ*

வைத்திருப்பார்கள். தென்னிந்தியா நான்கு வேறுபட்ட மாநிலங்களைக் கொண்டது. அனைத்தையும ஒருங்கிணைத்து பயன் பெற்றுவிட முடியும் என்று தோன்றவில்லை.

அவரின் சக நடிகர்களும் இயக்குநர் குழுவுமான நாசர், சந்தானபாரதி, கோவை சரளா ஆகியோர் கட்சியில் இணைவார்கள். ஆனந்த விகடன் படித்தீர்களா? ஷங்கர் பாபு எழுதிய ருசி திரில்லர் கதையைப் படித்தேன். நன்றாக இருந்தது. வேள்பாரி என்ற தொடர்கதையைப் படித்து வருகிறேன். நாவலாக இந்த நூல் பெரும் சாதனை படைக்கும். சு.வெங்கடேசன் இடது சாரி முகாம்காரரர். ஆனால் பிரசார வாடை வராமல் அவரால் நன்றாக எழுத முடிகிறது. ஆச்சரியம்தான்

டிஜிட்டல் ஊடகங்கள் அனைத்து விதிகளையும் புறந்தள்ளி வேகமாக வளர்ந்து வருகின்றன. ரெடி பிளேயர் ஒன் போல உலகம் மாறினாலும் ஆச்சரியமில்லை. வன விலங்குகள், பிக்ஸார், ப்ளூஸ்கை ஸ்டூடியோஸ் போன்ற நிறுவனங்களின் படங்கள் பின்னாளில் விரும்பக்கூடியவையாக இருக்கலாம். தியேட்டர்களில் பல்வேறு புது முயற்சிகள் இல்லை. எனக்கு ஏமாற்றமாக இருக்கிறது. மற்றொரு நிலையில் வெப்சீரிஸ்கள்

வேகமாக வளர்ந்து வருகின்றன. சினிமாவுக்கு மாற்றாக இதனை முன்நிறுத்துவது இனி தொடங்கும். மேலும் சினிமா வெளியீட்டையும் இணையத்தில் செய்யலாம்.

*ச.அன்பரசு*
*23.2.2018*

## 51
# மனத்தை தேற்றும் இயேசு மொழிகள்!

அன்புள்ள அன்பரசுக்கு, வணக்கம்.

நன்றாக இருக்கிறீர்களா? நீங்கள் வெண்டைக்காய், பீர்க்கங்காய்களை விட்டு நல்லி எலும்பை நறுக்கென கடித்து தின்றால் நன்றாக இருக்கும். நீங்கள் சாப்பிட மறுக்கிறீர்கள். சரி விடுங்கள். நான் உங்களுக்காக வே ண் டி க் கொ ண் டு பீஃப் கறி வாங்கி சாப்பிடுகிறேன்.

பத்திரிக்கைகாரனின் வாழ்க்கை இப்படித்தான் இருக்குமா என்று தெரியவில்லை. நீங்கள் உதவி ஆசிரியர் அல்லவா? அதனால்தான் இப்படி. நிருபராக இருந்தால் தினசரி நிறையப் பேர்களை

சந்திக்க வாய்ப்பு கிடைத்திருக்கும். நீங்கள் விரும்பும் பணியை செய்கிறீர்கள் என்பதே பெரிய விஷயம். எத்தனை பேருக்கு இந்த விஷயம் அமைகிறது. சொல்லுங்கள். ஆச்சரியம்தான். மனிதர்களோடு ஒத்துப்போவதுதான் இருப்பதிலேயே கடினமானது. அதில் மட்டும் நீங்கள் தேர்ச்சி அடைந்துவிட்டால் முக்கியமான பொறுப்புகள் உங்களுக்கு கிடைக்கலாம்.

இயேசு மொழிகள் இயல்பாகவே துன்பத்தில் சிக்கலில் தவிக்கும் மனத்தை ஆற்றுப்படுத்துவதற்கானது. அதனால்தான் அதன் சுவர்களில் எழுதும வாக்கியங்கள் நம்மை அதைக் கடந்து போகும் சில நொடிகளில் வசப்படுத்தி விடுகிறது. சிலுவைப்போர் என்று பிற மதங்களை, கடவுள் மறுப்பாளர்கள், அறிவுச்செல்வங்களை அழித்த முட்டாள்கள் அங்கிருந்துதான் வந்தார்கள் என்றால் ஆச்சரியமாக இருக்கிறது. ஆனால் தமிழ் மொழிபெயர்ப்பைப் பொறுத்தவரையில் சிறப்பாக வெற்றி பெற்றுவிட்டனர.

புள்ளியியலில் நான் கஷ்டப்பட்டு பணியாற்றுவதை நீங்கள் ஏதோ நான் பிளேபாய் பத்திரிகை படித்துக்கொண்டு ஜாலி செய்வதைப் போல நினைத்து எழுதிக்கொண்டிருக்கிறீர்கள். பெண்கள்

இயல்பாகவே என்னைத் தேடி வந்து பேசுகிறார்கள். நான் என்ன செய்கிறது? அறைக்கு கூட்டிவந்து கைமா செய்யலாம் என்றால் என் அறையில் திருமணமான ஒழுக்கவாதி வேறு இருக்கிறார். துயரம் எப்படி வாசல்படியில் நிற்கிறது பாருங்கள். நான் அவர்களை எங்கு சந்திக்கலாம் என்று கேட்கலாமா என்று யோசிப்பதற்கு முன்னரே ஐயங்கார் பேக்கரிக்கு போகலாமா என்கிறார்கள் பெண்கள். மனவேகத்தைப் பார்த்தீர்களா?

கமல் பற்றி நீங்கள் எப்போதும் அவநம்பிக்கையாக பேசி வந்திருக்கிறீர்கள். நான் அவரின் படத்தை பிடித்துப்போய் பார்த்திருக்கிறேன். அவ்வளவுதான். நான் அவரைப் பின்பற்றவில்லை. அதற்கு அவசியமில்லை.

எனக்கு திராவிட கழகம் முன்மாதிரியாக இருக்கிறது. இவரைப் பின்பற்றும் துரதிர்ஷ்டம் எனக்கு இல்லை. அனைத்தும் டிஜிட்டல் என்பதில் எனக்கு நம்பிக்கை இல்லை. அதில் நிறைய போலிச்செய்திகள் உள்ளன. அவற்றை எப்படி சரி செய்வது, அதில் உள்ள தவறுகளை யார் திருத்துவது? திரைப்படங்கள் சார்ந்து இணைய ஊடக நிறுவனங்களும், தியேட்டர்காரர்களுக்கும் முட்டிக்கொள்ள வாய்ப்பு உள்ளது. படம்

வெளியானபிறகு குறிப்பிட சில நாட்களுக்குப் பிறகு என படத்தை இணையத்தில் வெளியிட நிபந்தனை விதிப்பார்கள். நன்றாக சாப்பிடுங்கள் அன்பு. பார்ப்போம்.

*நன்றி !*

*அ.ராமமூர்த்தி*

*26.2.2018*

## 52

# பல சமையல்காரர்களின் கைவண்ணம்!

அன்புள்ள தோழர் ராமமுர்த்திக்கு, வணக்கம். எப்படி இருக்கிறீர்கள்?

ராமராஜ்ய யாத்திரைக்கு நிதி வசூலித்து வருகிறார்கள். உங்களுக்கு நிதி தரும் எண்ணம் இருக்கிறதா? புதிய இந்தியாவை இந்த நிதியில்தான் எழுப்ப போகிறார்கள் போல. இந்து தமிழ் நாளிதழின் காமதேனு வார இதழ் திங்கள்தோறும் வெளியாகிறது. படித்துப் பார்த்தேன். அதன் எழுத்துரு படிக்க இணக்கமாக இல்லை. அதன் பகுதிகளும், செய்திகளும் இலக்கிய காலாண்டிதழ் போன்று இருக்கிறது. மிகவும் கடினமான மொழியைக் கையாள்கிறார்கள்.

இதழில் மாநில சுய உரிமைக்குரல் எழுப்பும் சித்தராமையா கட்டுரை நன்றாக இருக்கிறது. அதை அட்டைப்படமாக போடாமல் அனுஷ்காவை அட்டைக்குப் பயன்படுத்தி இருக்கிறார்கள்.

பிரியாணிதான் செய்கிறார்கள். ஆனால் நிறைய செஃப்கள் கலந்து செய்வார்கள் போல. சுவை அகோரமாக இருக்கிறது. எங்கள் வார இதழின் பொறுப்பாசிரியர் நா. கதிர்வேலனிடம், எடிட்டர், இதழ் எப்படி என்று கேட்டார். அதற்கு, ஒரே வரியில் இறந்தே பிறந்த குழந்தை என்று சொன்னது என்னை அதிர வைத்துவிட்டது. இலக்கியவாதிகள் மட்டுமே இப்படி நறுக்கென்ற லொள்ளு பேச முடியும்.

இந்துவின் வார இதழ் பொங்கல் மலர் போல இருப்பதுதான் பிரசனை என்று நினைக்கிறேன். பிற விஷயங்களை மாற்றிக்கொள்ள இன்னும் நேரம் இருக்கிறது. நீங்கள் வேறென்ன படித்தீர்கள்? நான் தற்போது காந்தியார் சாந்தியடைய என்ற நூலை படித்து வருகிறேன். இந்தியா — பாகிஸ்தான் பிரிவினையின்போது காந்தி, ஜின்னா, நேரு ஆகியோர் என்ன கருத்து கொண்டிருந்தார்கள் என்று பேசுகிறது இந்த நூல். வரலாற்று நூல்களின் கட்டுரைகளை கருத்தூன்றி படிக்கத் தொடங்கியுள்ளேன்.

நன்றி!

ச.அன்பரசு

*23.3.2018*

# 53
# சிலை உடைப்பும் பின்னணியும்!

அன்புத்தோழர் ராமுவுக்கு, வணக்கம். நலமாக இருக்க இறையை வேண்டுகிறேன்.

பெரியாரின் பேச்சுகளை கேட்டவர்களுக்கு, இன்று மாற்றுக்குரல்கள் எழுவது ஆச்சரியமாக இருக்கலாம். தமிழகத்தில் நிறைய இடங்களில் சிலை உடைப்புகள் நடந்து வருகின்றன. சுயலாபத்திற்காக இங்குள்ளவர்கள் காட்டிக்கொடுப்பவர்களாக மாறிவருகிறார்கள்..

நாட்டை பாழ்படுத்தும் ஆர்எஸ்எஸ் இயக்கத்தின்பால் ஆர்வம் கொண்டவர், வல்லபாய் படேல். தடை விதிக்கப்பட்ட அந்த பயங்கரவாத அமைப்பை மீண்டெழ உதவினார். இதற்காக அவரைப் பாராட்ட மக்கள் பணத்தைச் செலவிட்டு சிலை எழுப்பி உள்ளது மத்திய அரசு. ஏழைகளுக்கு சேரவேண்டிய உணவு தானியத்தை எலிகள் கொறித்துக்கொண்டிருக்க, பசியில் சாகுபவர்களுக்கு உணவிட அரசுக்கு எண்ணமில்லை. மருத்துவ வசதிகளை செய்ய எண்ணமில்லை. ஆனால்

சுற்றுலாவுக்கான அடையாளமாக கோடி ரூபாய்களை செலவிட்டு சிலை உருவாக்குகிறது. இதற்கான வேலைகளை சீன நிறுவனத்திற்கு அளித்துள்ளது. இந்தியாவில் தயாரிப்போம் திட்டத்திற்கு இதை விட சிறந்த உதாரணத்தை நாம் பார்க்கவே முடியாது அல்லவா?

இன்றும் நாம் செய்யவேண்டிய பணிகள் நிறைய இருக்க, தியரியை உருப்போட்டுக கொண்டிருந்தால் எப்படி என்று புரியவில்லை. சிலைகளை தனிமனித வழிபாட்டை ஊக்குவிக்கும் அடையாளமாக நான் பார்க்கிறேன். மக்கள் செயல்களுக்கான விளைவுகளை உணர்வதில்லை. சிலை உடைப்பு போன்ற விஷயங்கள் நம் சிந்தனையை முக்கியமான பிரச்னைகளிலிருந்து திசை திருப்புவது போல படுகிறது. இதைப்பற்றி பேசினால் நமக்கு இட ஒதுக்கீடு மறந்துவிடும். அதைப்பற்றி பேசும்போது இன்னொரு பிரச்னையை கிளப்பி இதனை மறக்க வைப்பார்கள்.

இடதுசாரிகள் புள்ளிவிவரங்களை முன்வைக்க, வலதுசாரிகள் எளிமையாக அவர்களை முட்டாள்கள், லூசு என சொன்னால் பேச்சு வன்முறை பக்கம் திரும்பிவிடும். அப்புறமென்ன யாருடைய கருத்து முக்கியம் என்ன அடித்து

காண்பிக்க வேண்டி, ஆர்எஸ்எஸ் உதிரி அமைப்புகள் வன்முறையைத் தொடங்குவார்கள்.

தான், தன் குடும்பம், தன் வாழ்க்கை என்று ஒருவன் வாழ்ந்தால் அது நாட்டிற்கு பெரும் சாபக்கேடாக அமையும் என்றே நினைக்கிறேன்.
இதைத்தவிர சொல்ல என்னிடம் வேறு சொற்கள் இல்லை.

நன்றி!

ச.அன்பரசு
2.4.2018

54

# சமரச ஞானிகள் மூவர்!

தோழர் ராமமூர்த்திக்கு, வணக்கம்.

இன்று நாங்கள் தங்கியுள்ள அறையை காலி செய்யச் சொன்னார்கள். ஹாஸ்டலை நிர்வாகம் செய்பவர், ஏழை முஸ்லீம். இதனால் அவர் எங்களிடம் காலி செய்ய முடியாது என்று ஔரிடம் மறுப்பு சொல்லுங்கள் என அனைவரிடமும் பரிதாபமாகச் சொல்லிக் கொண்டிருந்தார். மில்லினிய பையன்கள்

எதற்கும் மறுப்பே சொல்வதில்லை. அப்படியா? அடுத்த ஏற்பாடு என்ன என்று அடுத்து கேட்டு அப்படியே ராயப்பேட்டைக்கு இடம்பெயர்ந்துவிட்டனர். எனக்கு தோன்றிய விஷயம், காலி செய்து அட்வான்ஸ் வாங்கி மயிலாப்பூரிலேயே வேறு ஹாஸ்டலில் சேர வேண்டும் என்பதுதான்.

காலி செய்யச் சொல்லி சமரசம் செய்ய ஓனர் தரப்பில் மூவர் ஹாஸ்டலுக்கு வந்து பேசினார்கள். அவர்களுடைய எண்ணம் ஒன்றுதான். மாணவர்களை அவர்களின் வாடகைக் காசுடன் அப்படியே புது இடத்திற்கு மாற்றவேண்டும். முடிந்தவரை மாணவர்களை வெளியே விடக்கூடாது என்பதில் குறியாக இருந்தார்கள். ஏறத்தாழ 38 பேர் அப்படியே ராயப்பேட்டைக்குச் செல்வதாக சொல்லி விட்டனர். அறைகளில் இருந்த செட்டப்புகளை உடைத்து பிரிக்கத் தொடங்கிவிட்டனர். நான் இந்த விடுதிக்கு வந்து இரண்டு மாதங்கள்தான் ஆகியிருக்கிறது. எனக்கான நேரம் முடிந்துவிட்டது என்று நினைக்கிறேன்.

எங்கள் வார இதழுக்கு கிடைக்கும் விஷயங்கள் அனைத்தும் இரண்டாம், மூன்றாம் தரமாகவே இருக்கின்றன. எனக்கு சமூகம் சார்ந்த

கட்டுரைகளை எழுத வாய்ப்பு தந்திருக்கின்றனர். கிடைத்த இடத்தில் என்ன செய்ய முடியுமோ அதனை செய்து வருகிறேன்.

மற்றபடி பீச்சுக்கு சென்ற நாயகி, அவரின் நாய்க்குட்டிக்கு வைத்த பெயர் என்று சமூகத்திற்கு தேவைப்படும் விஷயங்களை நிறைத்து 144 பக்கங்களை நிரப்புகின்றனர். நல்ல திறமையான லே—அவுட் கலைஞர்கள்தான், பணியாளர்கள்தான். ஆனால் அவர்களின் திறமைக்கும், உழைப்புக்கும் ஏற்படியும் சம்பளம் அளிப்பதில்லை. எல்லோரும் தீவிரமான புலம்பல்களோடு பணிகளை செய்யத் தொடங்கியுள்ளனர்.

வாசகர்கள் காலந்தோறும் மாறிக்கொண்டே இருக்கிறார்கள். அதற்கான விஷயங்களை பத்திரிகையில் எழுதுவது பெரும் சவால். வரும் தமிழ்ப்புத்தாண்டு வந்தால் நிறு வன டிவிக்கு 25 ஆவது ஆண்டு பிறந்த தினம். விமரிசையாக கொண்டாடுவார்கள். பணியாளர்களுக்கு அதனால் கிஞ்சித்தும் பிரயோஜனம் கிடையாது. குறிப்பாக அதன் நாளிதழ் பிரிவில் இருப்பவர்களுக்கு. வேறுபணிகளுக்கான முயற்சிகளைத் தொடங்கியுள்ளேன். பார்ப்போம்.

நன்றி!

55
# சிலைகள்தான் அடையாளம்!

*(அலைபேசி வழியாக)*

*அன்பரசு வணக்கம். நலமாக இருக்கிறீர்களா?*

*வேலை பல்வேறு தவறான தகவல்களால் நிரப்பப்பட்டுள்ளது. இதனால் அவற்றை சரிசெய்து களமதிப்பீடுகள் செய்யவே நேரம் சரியாக இருக்கிறது. இதற்காக ஹீரோ வண்டி ஒன்றை வாங்கியுள்ளேன். இதில்தான் இனி களமதிப்பீடு செய்வதற்கு செல்லவேண்டும். திருப்பூர் மாவட்ட அலுவலகத்திற்கும் எளிதாக சென்று வர முடியும். வண்டிக்கு மாத தவணை கட்டிக்கொண்டிருக்கிறேன்.*

*காமதேனு இதழ் பற்றி கூறியிருந்தீர்கள். இத்தனை வார இதழ் இருக்கும்போது கேட்டதெல்லாம் தரும் என்று இதழை உருவாக்கியிருக்கிறார்கள். ஆனால் வாசகர்கள் நினைத்த விஷயங்கள் இருக்குமா என்று தெரியவில்லை. எனக்கு அவர்களின் கருத்தியலில்*

உடன்பாடு கிடையாது. அனேகமாக நீங்கள் சொல்வதைப் பார்த்தால் காபி டேபிள் புக் போல இருக்கும் என்று நினைக்கிறேன். நிறுவனர்களிடம் காசிருக்கிறது பல்வேறு சோதனை முயற்சிகளை செய்யலாம். தவறில்லை.

சிலை என்பது தனிநபர் வழிபாட்டிற்கானதாக மாறிவிட்டது என்பது உண்மைதான். ஆனால் நீங்கள் கூறும் கருத்தை நான் மறுக்கிறேன். அதாவது, சிலைகள் தேவையில்லை என்பதை. இன்று லெனின் சிலை இருக்கிறது. அது சிலை மட்டுமல்ல, அவர் கம்யூனிச கொள்கைகளை தனது அரசு மூலம் செயல்படுத்திக் காட்டினார். அதனால் பயன் பெற்றவர்கள், அவரது ஆட்சி மூலம் நலன்களைப் பெ ற் ற மக்கள் அவரது சிலையை உருவாக்கி ஏதாவதொரு சதுக்கத்தில் வைக்கின்றனர்.

இதன் அர்த்தம் என்ன? அடுத்து வரும் தலைமுறையினர் அதனை பார்த்து அவர் யார்? என்ன செய்தார்? என்பதை கேட்டு புரிந்துகொள்வார்கள். அவர்களுக்கு குறிப்பிட்ட நாளில் மரியாதை செய்வதும் உண்டு. சிலைகளே வைக்காமல் இருந்தால் அவர்களை நாம் எப்படி நினைவுகூர்வது? பாடநூல்களில் உள்ள பாடங்கள் மாற்றப்படக்கூடியவை. அதிலும் கூட சமுகத்திற்கு

உழைத்தவர்களை அதற்கு எதிர் கருத்தியல் கொண்ட கட்சி வரும்போது மாற்றிவிட வாய்ப்பிருக்கிறது.

சிலை உடைப்பு என்றால் அங்குள்ள மக்களுக்கு தெரியாமல் நிகழ வாய்ப்பில்லை. தி.க. தொண்டர்கள் என்றில்லை. மக்களே முனைந்து வந்து அந்த பிரிவினைவாத சக்திகளை தடுக்கவேண்டும். அடித்து விரட்டவேண்டும். அந்த மனோபாவம் வராவிட்டால் விரைவில் தமிழகம் கூட பீகார், உத்தரப் பிரதேசம் போன்ற வளர்ச்சி குறைந்த பாடாவதி மாநிலங்களைப் போல மாற வாய்ப்பிருக்கிறது.

உங்களுக்காக உழைத்த தலைவர்களின் அடையாளங்களைக் கூட காப்பாற்ற முடியவில்லை என்றால் எப்படி? சிலைகள் வைப்பது எனபது அதிகாரம் சார்ந்ததாக மாறி ஜாதிக் கட்சிகள் முதல் ஊரைக் கொள்ளையடித்தவர்கள் வரை முன்னேறியிருக்கிறது. பிரிட்டிஷ்காரரர்களின் காலை நக்கிய சுயநலவாதிகளின் பெயர்களை இன்று ரயில்வே பெட்டிகளுக்கு வைக்கிறார்கள். அதையெல்லாம் நாம்தான் தட்டிக்கேட்க வேண்டும். காரணம், ரயில்வே தனிப்பட்ட நிறுவனம் அல்ல. மக்களின் பொதுப்பணத்தில் இயங்கும் பொது

நிறுவனம். அதைவிடுத்து ஒட்டுமொத்தமாக சிலைகள் கூடாது என்பது பார்ப்பன அதிகாரத்திற்கு பாலீஷ் போடும் பேச்சு போலவே படுகிறது.

உங்களது மனப்போக்கு அதிகார சக்திகளைத் தவிர்த்து, நிறைய பேரிடம் சேர்ந்து இணங்கி இருப்பது போல படவில்லை. எனவே நீங்கள் தனியாக தங்கும் அறையை தேர்ந்தெடுங்கள். அதுதான் உங்களுக்கும் நல்லது, பிறருக்கும் நல்லது. எழுத்துக்காரனுக்கு மனதில் எண்ணங்கள் ஊற்றாக பெருகினாலும், அதனை எழுத வெளிப்புற சூழலில் அமைதி தேவை. அங்கேயும் வெள்ளிக்கிழமை சந்தை போல கூட்டம் கும்மினால் மூளையில் ட்ராபிக் ஜாம் ஏற்பட்டுவிடும். கவனமாக இடத்தைத் தேர்ந்தெடுத்து தங்குங்கள். தற்போது, திமுக வரலாறு என்ற நூலைப் படித்து வருகிறேன்.

*நன்றி!*

*அ.ராமமூர்த்தி*

*10.4.2018*

56

# வலதுசாரிகளுக்கு வலுவேற்றும் இடது அமைப்புகள்!

அன்பிற்கினிய தோழர் ராமுவுக்கு, வணக்கம்.

நீங்கள் பேசும்போதெல்லாம் போனின் பின்னணியில் தீவிரமான டிவி விவாத நிகழ்ச்சிகள் ஓடிக்கொண்டே இருக்கின்றன. நீங்கள் இன்னும் அரட்டை அரங்க கொதிநிலை மனநிலையை விட்டு வெளியே வரவில்லை என்று நினைக்கிறேன்.

நாம் அம்பேத்கர்கரின் நூல்களில் சாதி ஒழிப்பு மட்டுமே படித்துள்ளேன். நீங்கள் நிறைய நூல்களைப் படித்திருக்க வாய்ப்பு அதிகமாக இருக்கிறது. காந்தி, சாதி வேண்டும், தீண்டாமை கூடாது என பாலீஷாக பேசினார் என்று சொன்னீர்கள். இடதுசாரிகள் கோட்சேயின் வன்முறையைப் பேசும்போது, பகத்சிங்கின் வன்முறையான பாதையைப் போற்றுகிறார்கள். திரும்பத் திரும்ப அவரை காந்தி காப்பாற்றி இருக்கலாம்

*என்கிறார்கள். இப்படி பேசுவது வலதுசாரிகளுக்கு பலமேற்றும் என்பதையும், அகிம்சை பாதையை மக்கள் பலவீனமாக அறிய வழிவகுக்கும் என்பதை அறிவதில்லை.*

*மயிலாப்பூரில் உள்ள ஹாஸ்டலை லீசுகு எடுத்து மாணவர்கள் விடுதியாக நடத்தி வந்தனர் போல. இப்போது அந்த செட்டப்புகளை உடைத்து எடுத்து வருகின்றனர். எங்கள் அறையில் கதவு மட்டுமே பிரிக்கப்படாமல் இருக்கிறது. விரைவில் அதனையும் பிரித்து எடுப்பார்கள். தேசிய பண்பாடு — அபிட் ஹுசேன் எழுதிய நூலைப் படித்து வருகிறேன். ஆங்கிலத்தில் எப்படி எழுதியிருக்கிறார்களோ தெரியவில்லை. தமிழில் மொழிபெயர்ப்பு சரியாக இல்லை. நிறைய பிழைகள் உள்ளன. தந்தை — கந்தை என்று மாறி வருகிறது. புத்தகத்தின் விலை ரூ.73. பதிப்பு நிறுவனம் அரசு என்பதால் இந்த அலட்சியமா? என்று தெரியவில்லை.*

*நன்றி!*

*சந்திப்போம்.*

*ச.அன்பரசு*
*16.4.2018*

57

# வாசிப்புதான் மகிழ்ச்சி!

அன்புத்தோழர் ராமுவுக்கு, வணக்கம் நன்றாக இருக்கிறீர்களா?

திடீரென எனக்கு மனச்சோர்வு நிலை தோன்றும். அப்போது போனிலும் எழுத்திலும் அந்த எண்ணங்கள் வெளிப்பட்டுவிடுகின்றன. அவற்றை என்னால் கட்டுப்படுத்த முடியவில்லை. தேசிய பண்பாடு என்ற நூல் பற்றி முன்னமே கூறியிருந்தேன். அடுத்ததாக நிதி சம்பந்தமாக நூல்களைப் படிக்க நினைத்தேன். விகடன் பிரசுர நூல் ஒன்று கிடைத்தது. அதையும் படித்தேன். இந்த நூலும் எனக்கு நிறைய செய்திகளை அறியத்தரவில்லை என்று படுகிறது.

நிறைய நூல்களை வாங்கி அலமாரியில் அடுக்கி வைத்து படிப்பது என்னைப் பொறுத்தளவில் பெரிய சந்தோஷம். என்னிடம் உடை, சோப்பு, சீப்பு ஆகிய பொருட்கள் இருப்பில் இருப்பதை விட, இந்த நூல்கள் தனி சந்தோஷத்தை தருகின்றன. அதைப்போலே நூல்களை பிறருக்கு பரிந்துரைப்பதும், நாம் படித்த நூல்களை

நூலகங்களுக்கு வழங்குவதும் மனநிறைவு தருகின்றன. நான் கட்டுரை நூல்கள் படித்த களைப்பை லத்தீன் அமெரிக்க சிறுகதைகள் — சிவகுமார் (பாதரசம் பதிப்பகம்) போக்கியது.

பணிக்காக வேறிடம் தேடிப் போவதற்கான முயற்சிகளை செய்து வருகிறேன். எனவே நூல்களை வாங்கி அடுக்க விரும்பவில்லை. அரசியல், வரலாறு சார்ந்து நிறைய நூல்களை வாசிக்க வேண்டும். இத்துறை சார்ந்து நான் பலவீனமாக உணர்கிறேன். இவற்றைப் பற்றி எழுதுவதற்கு செறிந்த அறிவு தேவை. தமிழ்நாடு சார்ந்த அரசியலை நீங்கள் சாமர்த்தியமாக அறிந்து பேசுவது என்னை மகிழ்ச்சிக்குள்ளாக்குகிறது. நீங்கள் வாசித்த நூல்களையும் உங்கள் கருத்துகளையும் எழுதி வையுங்கள். அது பின்னர் பிறருக்கும் நூல்களை வாசிக்க உதவும். அதுவே உங்களை அற்புதமான ஆளுமையாக வளர்த்தெடுக்கும்.

நன்றி!

ச.அன்பரசு
*26.4.2018*

58

# பொதுவாழ்வை நொறுக்கும் அந்தரங்கம்!

அன்பு நண்பர் ராமமூர்த்திக்கு, வணக்கம். நலமாக இருக்கிறீர்களா?

சிறுகதைகளை வாசிக்கத் தொடங்கியிருப்பது மகிழ்ச்சி. மனிதர்களுக்கான ஆறுதல்களை சொல்லி, தேற்றுவது கடினமாக இருக்கிறது. பொதுவாக உலகமே நவம்பர், டிசம்பர் மாதங்களில் ஏதேனும் நடக்குமா, நடந்துவிடுமோ என்ற எதிர்பார்ப்பில் காத்திருப்பது போல இருக்கிறது.

மும்பை தாக்குதல் நடந்து பத்து ஆண்டுகளாகின்றன. தற்போது அடுத்த பிரச்னையை நோக்கி அரசியல் கட்சிகள் நகரத் தொடங்கிவிட்டன. அயோத்தி கோவிலுக்கான பேரணியை தொடங்கியிருக்கிறார்கள். அரசு இதுபோன்ற மதச்சார்பான நடவடிக்கைகளைப் பற்றி கேள்வி கேட்டால் உடனே அவர் இந்தியராக இருக்கவே முடியாது என சமூக வலைத்தளங்களில் வெறித்தனமாக பிரசாரம் செய்யப்படுகிறது. அவரின்

சாதி, மதம், இன்ன பிற தனிப்பட்ட விஷயங்கள் பேசப்படுகின்றன. இதற்கான காரணம் என்னவென்றே புரியவில்லை.

தேசியவாதம் பேசும் பாஜகவின் கருத்துகளை எதிர்க்க, அக்கட்சி போட்ட வழியில் கைக்கட்சி பயணிக்கத் தொடங்கியுள்ளது. ஆபத்தான போக்கு இதுதான். அவசியமான உணவுப்பொருட்களை கிடைக்காமல் பழங்குடி மக்கள் இறக்கும்போது, அவர்களை இந்துகள் என்று பேசி பெருமை கொள்வதோடு சரி. அவர்களுக்கான உணவுப்பொருட்கள் வழங்கும் செலவுக்குமேல் வெட்டியாக வானுயர்ந்த சிலைகளை உருவாக்குவதை விட சிறந்த வக்கிரம் என்ன இருக்க முடியும்?

இந்தியாவின் நவீனச் சிற்பிகளில் ஒருவரான நேருவின் நூல்களை வாங்கி வாசிக்க வேண்டும். இங்கு அவரைப் பற்றி பேசுபவர்கள், காங்கிரஸ் கட்சிக்காரர்களாகவே இருக்கிறார்கள். நாம் அவரின் பணியின் பொறுப்பு செய்த சாதனைகள் பற்றி பேசும்போது, அதனை முறியடிக்க உடனே அவரின் தனிப்பட்ட வாழ்க்கை, அந்தரங்கங்களை வன்மத்துடன் பேசுகிறார்கள். இதற்கு என்ன பொருள் இருக்கிறது என்று தெரியவில்லை. மாநில

முதல்வர்களுக்கு நேரு எழுதிய கடிதங்களைப் போல பிறர் அக்கறையுடன் எழுதியதில்லை. 1948—1963 காலகட்டத்தில் நேரு எழுதிய கடிதங்கள் மூன்று நூல்களாக வெளிவந்துள்ளன. வாய்ப்பிருந்தால் அவற்றைப் படிக்கவேண்டும்.

நமக்கு இயல்பாகவே ஒருவரின் சாதனைகளைப் பேசினால், அவரின் தனிப்பட்ட வாழ்க்கையை பேசி அதை உடைக்கவேண்டும் என்று வக்கிரமாகத் தோன்றுகிறது. இதனால் காந்தி அகிம்சைக்கு பாடுபட்டதை விட அவர் நிர்வாணமாக செய்த சோதனைகளைப் பற்றி இந்தியா டுடே சிறப்பிதழ் போட்டு காசு பார்க்க முடிகிறது. என்ன மனநிலையோ என்னவோ? அதுவும் ஒரு விதத்தில் தன்னை நிர்வாணமாக வெளிப்படுத்திக்கொண்டவரின் மனத்தன்மையால் தான் சாத்தியம் என்பதை இவர்கள் உணர்வதில்லை.

நன்றி!

சந்திப்போம்!
ச.அன்பரசு
25.11.2018

59

# வரிசையில் நிற்கும் நேர்மை!

*இனிய நண்பர் ராமமூர்த்திக்கு, வணக்கம். நலமறிய ஆவல்.*

நான் அறைத்தோழர் கொடுத்த பிளீச் என்ற படம் பார்த்து வருகிறேன். இது 2டி அனிமேஷனாக எடுக்கப்பட்டுள்ளது. படமாகவும் உருவாக்கியிருக்கிறார்களாம்.

கெட்ட ஆன்மாக்களை விரட்டி அடிக்கும் நல்லாத்மா(இளைஞர்), அவருக்கு உதவும் சைட் கிக்காக இளம்பெண் இருக்கிறார். இவர்கள்தான் நாயக, நாயகி என்று சொல்லவும் வேண்டுமா?

நல்ல ஆன்மாக்களை வேட்டையாடும் பூதங்களை வேட்டையாடுவதுதான் இவர்களுக்கு வேலை. பள்ளி முடிந்தபிறகு ஹாபியாக செய்கிறார்கள். இதில் நாயகிதான் முழுவேகமாக இருக்கிறாள். இவளுக்கு நாயகன் உதவுகிறான். இயல்பாகவே அவனின் உடலில் இந்த பூதங்களை அழிப்பதற்கான உந்துதலும், சக்தியும் வேகமாக எழுகிறது. அது மேல் உலகிலிருந்து வந்த நாயகிக்கு ஆச்சரியமாக இருக்கிறது. அதற்கு காரணம், நாயகின் தாத்தா படு கெத்தான பூதமாக விளங்கியவர் என்று பின்னர் தெரிய வருகிறது.

விறுவிறுப்பான அனிமேஷன் தொடர் இது. நாயகனுக்கு நாயகி மீது வரும் மென்மையான காதலும், அவள் குடும்ப பாரம்பரியத்தால் அதை ஏற்கவும் முடியாமல் விலக்கவும் முடியாமலும்

தடுமாறுகிறாள். இந்த நேரத்தில் அவளை கைது செய்ய மேல் உலகிலிருந்து காவலர்கள் வருகிறார்கள். காதலியை எப்படி நாயகன் காப்பாற்றினான், தனது சக்தியை எப்படி அதிகரித்துக் கொள்கிறான் என்பதுதான் கதை. வன்முறையை அழகாக காட்டி பார்க்கும் அனைவருக்கும் பிடிக்க வைத்திருக்கிறார்கள்.

நெடுங்காலம் பேசாமல் இருந்த தோழரிடம் பேசினேன். இப்போது கோவையில் காவலராக இருக்கிறார். பணமதிப்பு நீக்க நடவடிக்கையை எப்படி அவரது குடும்பம் சமாளித்தது என்று கேட்டேன். அதற்கு அவர் சொன்ன பதில் என்னை தீவிர அதிர்ச்சிக்குள்ளாக்கியது.

தெரிந்த நண்பர் மூலம் 68 ஆயிரம் ரூபாய்களை மாற்றினார்களாம். இது மட்டுமன்றி, தெரிந்த நண்பருக்கு 15 ஆயிரம் ரூபாய் மாற்றிக்கொடுத்தாராம். பார்த்தீர்களா? அரசு அமைப்பில் ஊழல் எப்படி உருவாகிறது என்று. சாதாரணம், சிறப்பு வரிசை என்று கோவில்களில் உருவாகுவது போல அனைத்து இடங்களிலும் உள்ளது. ஆனால் நெஞ்சு பொறுக்கமுடியாமல், இப்படி செய்யறது தப்புன்னு படலியா என்று கேட்டேன். இந்த உலகில் நாம வாழனும்னா

கொஞ்சம் வளைஞ்சு கொடுத்து போகணும்ப்பா என்று சொன்னார். எனக்கு எப்படி யோசித்தாலும் அது சரியான பதிலாக படவில்லை.

திறமை வரிசையில் நிற்க, சிபாரிசு நாற்காலியில் அமர்ந்து காலாட்டிக்கொண்டு இருக்கிறது. அவர் சொன்ன காலகட்ட நிகழ்ச்சிகளை நினைத்துப் பார்த்தால் கஷ்டமாக இருக்கிறது. மேற்சொன்ன நடவடிக்கையை முன்னெச்சரிக்கை இன்றி எடுத்த பிரதமர் முதன்முதலில் தேர்தலில் வென்றபோது நான் பாராட்டிப் பேசினேன் என்பது எனக்கு இப்போது நினைவுக்கு வருகிறது. ஒருவரைப் பற்றி முழுமையாக அறியாமல் ஆதரிப்பது, நம்மை நாமே புதைகுழியில் புதைத்துக்கொள்வது போல.

காலம்தோறும் சில மதிப்புகள் காணாமல் போய்க்கொண்டிருக்கின்றன. நாம் உயர்வாக மதித்து நினைத்துப் போற்றிய மாண்புகள், உன்னதங்கள் உடைந்து நொறுங்கி வருகின்றன. நாம் அதைப்பார்த்து செய்வதறியாமல் நின்று கொண்டிருக்கிறோம். உடைவது அவை மட்டுமல்ல நம் ஆன்மாக்களும்தான். அவை இனி நம் மனதில் இடம்பெறப் போவதில்லை.

நன்றி!
சந்திப்போம்!

*ச.அன்பரசு*
*28..11.2018*

60

# குறை சொல்ல ஏதுமில்லை!

அன்புள்ள தோழர் அன்பரசிற்கு, வணக்கம்.

நலமறிய ஆவல். நன்றாக இருக்கிறீர்களா?

வரலாறு என்பது வலுவுள்ளவர்கள். அதிகாரத்திலுள்ளவர்கள் எழுதுவதுதான். அதில் எந்த மாற்றமுமில்லை. அதேசமயம் அதனை

பல்வேறு கருத்துகளுடன் நடந்த விஷயங்களை முன்வைத்து எழுதுபவர்களையும் நாம் கருத்தில் கொள்ளவேண்டும். அதுபோன்ற நூல்களை வாசிக்க வேண்டும். அப்போதுதான் இன்று நம் நாட்டில் நிலவும் மதச்சார்பான நிலைக்கு காரணம் என்ன என்பதை உணர முடியும்.

அகிம்சை, வன்முறை என்ற கருத்தை ஜனநாயகம், சர்வாதிகாரம் என்ற கருத்துகளை உள்ளடக்கித்தான நாம் பேசி வருகிறோம். காந்தி, பனியா சாதிப்பிரிவில் வளர்ந்து வந்தவர். இறைவனை வணங்குவது என்பது அவராக பின்னாளில் உருவாக்கிக்கொண்டதல்ல. அதெல்லாம் அவரது குடும்பத்தின் பாரம்பரியமாக வந்தது. இதில் குறை சொல்ல ஏதுமில்லை. அவர் மீது வைக்கும் குற்றச்சாட்டுகளுக்கு அவர் தான் வாழும் காலத்திலேயே பதில்களை முன்வைத்திருக்கிறார். பேசியிருக்கிறார்.

அதேசமயம் அவர் சாதியையும், தீண்டாமையும் விட சுதந்திரத்தை மட்டுமே முக்கியமாக கருதினார். அதனை அவரது பலவீனம் என்று கருதுகிறேன். காரணம், நாம் சுதந்திரம் பெற்றுவிட்டால் மக்களிடம் பேசி அவர்களின் மனதை மாற்றிவிடலாம் என்று கருதினார். ஆனால் அது

இந்தியா பாகிஸ்தான் பிரிவினையின் போது நிராசையான விஷயம் ஆகிவிட்டது. நம் வீட்டிலுள்ள தாத்தாவின் முணுமுணுப்பாக காந்தியை அனைத்து அரசியல்வாதிகளும் மக்களும் கருத தொடங்கினர்.

தன் வாழ்நாளில் தான் வலியுறுத்திய கொள்கைகள் சரிந்து விழுவதைப் பார்த்து மனம் கலங்கிப்போனார் காந்தி. துயரம்தான். இந்த வகையில் பெரியார் இறுதிவரை சாதி விஷயத்தில் சமரசம் செய்துகொள்ளவில்லை. காந்தி நிறையமுறை சமரசம் செய்துகொண்டு மக்களின் வாழ்க்கை அமைதியாக செல்ல உதவினார். ஆனால் இந்த தந்திரம் வெகு நாட்கள் உதவவில்லை.

இங்குள்ளவர்கள் பார்ப்பனர்களை தங்களின் உயர்வுக்கான வழிகாட்டுதலாகக் கருதி அவர்களை அப்படியே பின்பற்றத் தொடங்கினர். அவர்கள் கைக்கொண்ட அனைத்து சமூக விஷயங்களையும் அதே இடத்தி இடைநிலைச் சாதிகள் செய்தனர். அதனால்தான் இன்றும் சாதியும் தீண்டாமையும் அப்படியே இருக்கிறது. இதில் இறந்துபோன ஒருவரைப் பற்றி மட்டுமே குறை, புகார் சொல்ல ஏதுமில்லை.

அவர்களைப் பின்பற்றியவர்கள் என்ன செய்தார்கள்

என்பது முக்கியமாகப் படுகிறது. காந்தி மனமாற்றத்தை முக்கியமாக நினைத்தார். அனைத்து இடங்களிலும் அது பயனளிக்கும் என்று கூறமுடியாது. அதற்கு காத்திருக்கவும் முடியாது. பெரியார் போல சில அதிரடியான விஷயங்களையும் செய்யவேண்டும். அப்போதுதான் கெட்டிதட்டிப்போன மனங்கள் மாறும்.

அம்பேத்கர் பற்றியும் அரசியல் சார்ந்த நூல்கள் வாசிப்பதும் நம்முடைய சூழல், நாம் இருக்கிற இடம் சார்ந்த தன்மையை தக்க வைத்துக்கொள்வதற்குதான். இதில் பிரமிக்க ஏதுமில்லை. உணவு, உடை, இருப்பிடம் ஆகிய தேவைகளை நிறைவு செய்துகொண்டால் நீங்கள் காலச்சுவடு, உயிர் எழுத்து, அம்ருதா போன்ற இதழ்களை நிம்மதியாகப் படிக்கலாம்.

நான் இருக்கும் பதவி, அதில் மேலே உயருவதற்கான வழிவகைகளை ஆராய்ந்து வருகிறேன். எனவே, அதற்கும் உரிமைகோரி கேட்பதற்குமான விஷயங்களைப் படித்து வருகிறேன். காந்தி நூல்களைப் படிப்பது, அவரது தேவைக்கும் மீறியது. ஆனால் அம்பேத்கர் படிப்பது மிக அவசியம். அவரால் அவரது சமூகமே மேலெழும் அவசியம் இருக்கிறது. இந்த வேறுபாடுதான் நம்மிருவரின்

வாசிப்பில் உள்ளது..

இயல்பாகவே கைக்கட்சி செய்த பல்வேறு ஊழல்களால் வலதுசாரிக்கட்சியான தாமரைக்கட்சி ஆட்சிக்கு வந்தது. நிறைய விளம்பரங்கள்தான் அதற்கு காரணம். மேலும் நம் ஊரில் இளைஞருக்கு வாய்ப்பு என்பதை விட வயதானவர்களின் அனுபவம் என்பதற்கு அதிக மதிப்பளிக்கிறார்கள்.

இளமையின் வேகமும், கற்றுக்கொள்ளும் முனைப்பு ஆகியவற்றை இவர்கள் பொருட்படுத்துவதில்லை. சிறப்பான உடை. நல்ல விளம்பரம் ஆகியவற்றை வைத்தே இன்றைய பிரதமர் வென்றார். நீங்கள் பாராட்டி பேசும்போது, எனக்கு குஜராத் விஷயங்கள் நினைவுக்கு வந்தன. பழங்குடிகள், தலித்கள், முஸ்லீம்களை பலி கொடுக்க போகிறார்கள் என்று நினைத்தேன். நடக்கும் சம்பவங்கள் நினைப்பு சரியாகவே இருக்கிறது என்று நிரூபிக்கின்றன. துயரம்தான். உங்களுக்கும் எனக்கும் பிடிக்கிறதோ இல்லையோ அவர்தான் இந்தியாவுக்ககு பிரதமர். துயரத்தை, வேதனைகளை அனைவரும் அனுபவித்தே ஆகவேண்டும்.

காவலராக உள்ள நண்பரின் சாதிப்பிரிவு என்ன என்பதை நீங்கள் சொல்லவில்லை. எதுவாக இருந்தாலும் அரசு அமைப்புகளை தனக்கு

அனுகூலமாக மாற்றிக்கொள்ளும் ஆசை இந்தியர்கள் ஒவ்வொருவரின் மனதிலும் இருக்கிறது. காரணம், அரசு அமைப்பின் ஆணைகளுக்கு இணங்கி கட்டுப்பட்டே பழகியவர்கள் நாம். அது முக்கியமான காரணமாக இருக்கலாம். மற்றொன்று மற்றவர்கள் எப்படி போனால் என்ன? நம்மை நாம் காப்பாற்றிக்கொள்வோம் என்னும் தன்மை. அதுதான் மனிதர்கள் இங்கு வாழ்வதற்கு முக்கியக் காரணம், அவர்கள் வாழும் சூழல் அப்படியொரு இக்கட்டை மனத்தளவில் ஏற்படுத்தியிருக்கலாம்.

அரசு ஊழியர் வரலாற்றில் எம்ஆர்ஏ என்ற நூலை படித்துவருகிறேன். தொழிலாளர் அமைப்புகளை கட்டிய எம்ஆர் அப்பன் என்பவரைப் பற்றிய நூல். புது விடுதிக்கு மாறிவிட்டீர்கள். அங்கு வசதிகள் எப்படி? நன்றாக இருக்கிறீர்கள் அல்லவா? நன்றாக சாப்பிடுங்கள். உடலைப் பார்த்துக்கொள்ளுங்கள்.

*நன்றி*

*சந்திப்போம்.*

*அ.ராமமூர்த்தி*

*30.11.2018*

# 2019

61

## கவனம் முக்கியம்!

அன்புள்ள நண்பர் ராமுவுக்கு, வணக்கம். நலமாக இருக்கிறீர்கள் என்று நம்புகிறேன். இரண்டே நாட்களில் பொங்கல். டிக்கெட், புக்கிங் என எங்கள் இதழுக்கான ஆசிரியர் குழு முழுவதும் ஊருக்குக் கிளம்ப ஆயத்தமாகிவிட்டது.

நீங்கள் பெரும் பணத்தை பங்குச்சந்தையில் விட்டது எனக்கு பெரிய அதிர்ச்சி. உங்களது புதிய முயற்சி, பரிசோதனைகளை நான் எப்போதும் ஆதரித்து வந்திருக்கிறேன். நீங்கள் இதுபற்றி என்னிடம்

ஆலோசனையாவது கேட்டிருக்கலாம். சரி எதுவாக இருந்தாலும் உங்கள் அம்மாவிடம் இதுபற்றி விளக்கினீர்களா? துறைசார்ந்தவர்களிடம் இதுபற்றி இன்னும் தீர விசாரித்திருக்கலாம். இனி நான் என்ன சொன்னாலும பிரயோஜனமில்லை. காலம் கைமீறிவிட்டது. பணத்தை திரும்ப பெறுவது உங்களது சாமர்த்தியத்தில்தான் உள்ளது.

நண்பர் கார்ட்டூன் கதிரின் வீட்டுக்கு இன்று சென்றேன். புதிய நாளிதழில் வேலை கிடைத்திருக்கிறது. எனவே ஒண்டு குடித்தனவீடு, பொது கழிப்பறை அவதியிலிருந்து விடுதலையாகி இருக்கிறார். புதிய வீடு கிடைத்த கையோடு அவருக்கு பெண் பார்த்திருக்கிறார்கள். விரைவில் திருமணம் செய்யவிருக்கிறார். அவருக்கு கல்யாணம் செய்த கையோடு அவரது பெற்றோர் தங்களது சொந்த ஊருக்கே செல்லவிருக்கிறார்கள். இது கொஞ்சம் வித்தியாசமாக இருக்கிறது. ஆனால் அவர்களுக்கு சொந்த ஊரில் வாழும் ஆசை மனதில் இருக்கிறது. அவரது அம்மா மிகவும் பிரியமாக பேசுவார். இறையருள் காக்கட்டும்.

தி இந்து பொங்கல் மலர் படித்து வருகிறேன். மூனாம்பள்ளி சாவக்கட்டு பற்றிய தகவல்களை கட்டுரையாக்கி இருக்கிறார்கள். நல்ல கட்டுரை.

எங்கள் நாளிதழின் பொங்கல் மலரோடு பருப்பு பொடி இலவசமாக தருகிறார்கள். பருப்பு பொடி வேண்டும் என்றால் புத்தகம் வாங்குங்கள். பணத்தேவையைத் தாண்டி நம்மை நெகிழ்வாக வைப்பவை இலக்கியம்தான். சூழல்கள் நெருக்கினாலும் வாசிப்பை கைவிடாதீர்கள். 2019 புதிய அனுபவங்களைத் தந்து பக்குவம் பெற வாழ்த்துகிறேன்.

நன்றி
ச.அன்பரசு
13.1.2019

62

# கடமையும், பொறுப்பும்!

அன்புள்ள ராமமூர்த்திக்கு, வணக்கம். நலமாக இருக்கிறீர்களா?

களப்பபணியை கச்சிதமாக செய்து வருகிறீர்கள் போல. அதிகம் உங்கள் பேச்சைக்கூட விடுமுறை தினத்திலும் கேட்கமுடிவதில்லை. இந்த வாரம் கவுண்டமணி சொல்வது போல நான் ரொம்ப பிஸி என்று சொல்லும்படி ஆகிவிட்டது. இதழ் பொறுப்பாசிரியரின் மாமியார் ஆபத்தான

உடல்நிலையில் இருக்கிறார் என்று அவர் பார்த்துக்கோ என்றுசொல்லிவிட்டு கிளம்பிவிட்டார். அத்தனை ஆட்களும் யூடர்ன் போட்டு என்னைத் துரத்துவார்களே என்றுதான் பயம்.

*25.1.19* இதழுக்கான அட்டைத்தேர்வு நான்தான். என்னைப் பொறுத்தவரை எளிமையாக இருக்கவேண்டும். படு அலங்காரமான வார்த்தைகளை நான் நம்புவதில்லை. உள்ளே இருக்கும் விஷயங்களை அவர்கள் படிக்க ஊக்கப்படுத்தவேண்டும் என்று சிலர் சொல்கிறார்கள். எதையாவது தெரிந்துகொள்ளவேண்டும் என்ற நினைப்பவன் கதவைப் பார்த்துக்கொண்டே நிற்கமாட்டான். வீட்டுக்குள் என்ன என்று பார்க்க அவனே நுழைவான். அந்த ஆர்வம் இல்லாதவர்கள் எங்கள் இதழை வாங்கினாலும் ஒன்றுதான். வாங்காவிட்டாலும் ஒன்றுதான்.

பொறுப்பு சிலரைத் தேடிவரும். சிலர் தன் திறமையால் தன் பணிகளைப் பெறுவார்கள். எனக்கு கொடுக்கப்படும் பணிகள், வேறுவழியின்றி எனக்கு கொடுக்கப்படுகிறது. பல நேரங்களில் யாரும் சில பணிகளை ஏற்றுக்கொள்வதில்லை. அவை தானாக என்னுடைய இருக்கைக்கு

வந்துவிடுகின்றன. இதற்கு இன்னொரு பெயர் இளிச்சாவாய்த்தனம் என நெல்லை கதிரவனும் அவரது மாத இதழ் எடிட்டர் ஞானதேசிகனும் கூறினார்கள். ஒருவகையில் அதுவும் சரிதான். எனக்கு வழங்கப்படும் பணிகளை மறுப்பு சொல்லாமல் செய்யவேண்டுமென ஆசிரியர்கள் விரும்புகின்றனர். என்ன செய்வது?

பல எழுத்தாளர்கள் 1953இல் பிறந்த என் அப்பா கால எழுத்தாளர்கள். கதைகள் பரவாயில்லை ரகம். பட்டம்மாள் நூறு, பாலசரஸ்வதி நூறு என பத்து கட்டுரைகள் எழுதிவிட்டனர் பக்கத்தொல்லை ஒழிந்துவிட்டது அல்லவா? புத்தகம் இப்படித்தான் ரெடியாகியிருக்கிறது. ஸ்டீபன் ஹாக்கிங் பற்றிய புத்தகம் ஒன்று வாங்கினேன். படிக்க அறைக்குச் சென்றபோது மின்சாரம் இல்லை. மொட்டைப்பனங்காடு கருப்பணசாமியை வேண்டிக்கொண்டேன். அதனாலோ என்னவோ தெரியவில்லை. மின்சாரம் வந்துவிட்டது.

நன்றி!

சந்திப்போம்

ச.அன்பரசு
23.1.2019

63

# நடைமுறைக்கான கல்வி தேவை!

அன்புள்ள அன்பரசுக்கு, வணக்கம்.

நீங்கள் என்னை சாதி சார்ந்து கூப்பிடும் சொல் வந்துவிடக்கூடாது என்பதற்காக வாங்க போங்க என்று அழைக்கிறீர்கள் என்று நினைக்கிறேன். நமது ஊரில் பொதுவாக இப்படி பேசிக்கொள்வதே மரியாதையாக இருக்கும். நமது ஊரில் ஏகப்பட்ட சாதி சார்ந்த மோதல்கள் இருக்கின்றன. கவுண்டர் வீட்டு சிறுவர்களைக் கூட வாங்க போங்க என்று அழைக்கும் கட்டாயம் என்று ஒருமுறை என்னிடம் சொல்லியிருக்கிறீர்கள். உங்களுக்கு நினைவில்லாமல் இருக்காது. பெரும்பாலும் அதுபோன்ற சூழ்நிலையில் உங்கள் முகம் எந்த உணர்ச்சிகளையும் வெளிப்படுத்தாமல் உறைந்துவிடுவது எனக்கு சங்கடத்தைத் தருகிறது.

நிறைய நேரம் நான் அத்தகையை விஷயங்களைப் பேச வேண்டாம் என்று நினைத்தாலும் நம்மை சமூகம் விடுவதாக இல்லை. ஒருவனுக்கு திறமை இருந்தால் கூட குறிப்பிட்ட சாதியிலிருந்து வேர்பிடித்து வரவேண்டும் என்றுதான் சொல்லுகிறார்கள். அனைவரும் பொங்கலுக்கு

கிளம்புகிறார்கள் என்கிறபோது நீங்கள் எப்படி அலட்டிக்காமல் கட்டுரைகளை எழுதிக்கொண்டு இருக்கிறீர்கள் என்று எனக்குப் புரியவில்லை. வினோதமான ஆள்தான் நீங்கள்.

பங்குச்சந்தை பற்றி அறிவை நான் பொருளாதாரப் பாடம் படித்துக்கூட அடையவில்லை என்பது எனக்கு வெட்கத்தை தருகிறது. நடைமுறையில் கற்றுக்கொள்ளக்கூடிய எந்த விஷயங்களும் அப்டேட்களும் இல்லாமல் படிப்பை முடித்து பட்டம் வேறு பெற்றிருக்கிறேன்.

ஆனால் பங்குச்சந்தை பற்றிய விஷயங்கள் தெரியாமல் அநியாயத்திற்கு ஒரு லட்சத்தை கோட்டை விட்டுவிட்டேன். எந்த கம்பெனியின் பங்கும் பூஜ்ஜியத்திற்கு வரும் என்று நம்பமுடியவில்லை. கூடும், குறையும் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் நான் பணம் கொடுத்த ஏஜெண்ட் எளிமையாக பங்கு பூஜ்ஜியத்தை தொட்டுவிட்டது என்று சொல்லி பணத்தைத் திருடிவிட்டான்.

நான் இதற்கு யாரையும் குறைசொல்ல விரும்பவில்லை. நான்தான் இதற்கு முழுமுதற்காரணம். தலைகனமாக அனைத்தும் ஏஜெண்ட் பார்த்துக்கொள்வார் என்று

இருந்துவிட்டேன். கடினமான பாடத்தை பெரும்பணத்தை இழந்து கற்றுக்கொண்டுவிட்டேன்.

உண்மையில் நிறைய விஷயங்களைக் கற்றுக்கொண்டே இருக்கவேண்டும் என்று உங்களைப் பார்த்துத்தான் கற்றுக்கொள்கிறேன். கருத்திபாளையத்தில் காசு இல்லாத நிலையிலும் நான் புத்தகங்களை முடிந்தளவு வாங்கி படித்துக்கொண்டிருந்தேன். ஆனால் இன்று நிலைமை மாறிவிட்டது. படிப்பதை கைவிட்டுவிட்டேன். அதனால்தான் இந்த சறுக்கல். படிப்பது, படித்ததில் எனக்கு உதவும் விஷயங்களை பகிர்வது என நீங்கள் எப்போது பேசினாலும் புதிய விஷயங்களைச் சொல்லுகிறீர்கள். உற்சாகமூட்டுகிறீர்கள். உங்கள் முன்னாள் பத்திரிக்கையை இப்படி கிண்டல் செய்யமுடியுமா என்று தெரியவில்லை. பருப்பு பொடியை நான் தனியாகவே வாங்கிக்கொள்கிறேன். உருப்படியாக மேட்டர் ஏதாவது தேறினால் சொல்லுங்கள் வாங்கலாம்.

பத்திரிக்கையாளராக ஏற்கெனவே நீங்கள் சாதித்துவிட்டீர்கள். கிராமத்திலிருந்து வந்து பத்திரிகையில் ஒருவர் வேலை பார்ப்பார் என்று யாராவது நினைத்துப் பார்ப்பார்களா? நீங்கள்

என்னையும் இந்த துறைக்கு அழைத்துவரப் பார்த்தீர்கள். நான் வேறு லைனுக்குப் போய்விட்டேன். ஆனால் என்ன? நீங்கள் ஊடகத்துறையில் இருக்கிறீர்கள். நீங்கள் முத்தாரம் இதழ் முழுமையும் செய்தீர்கள். இதில் புதிய பத்திரிகையில் அட்டை தேர்வு செய்வது பிரம்ம பிரயத்தனமாகவாக இருக்கப்போகிறது? இந்த வேலைகளை நீங்கள் இடது கையாலே செய்துவிட முடியும்.

அனைத்து இடங்களிலுமே மேல், கீழ் சீனியர், ஜூனியர் என்ற விஷயங்கள் இருக்கும். அதிலும் சில நிறுவனங்களில் வேலைகள் புரோடோகால்படி செய்யவேண்டும் என்பார்கள். பார்ப்பனர்கள் உயரங்களில் இருக்கும் ஊடகங்களில் இந்த படிநிலைகள் தீவிரமாக இருக்கும். கவனமாக வேலையை மட்டும் பாருங்கள். இல்லையெனில் தேவையில்லாமல் மன உளைச்சல் ஏற்படுத்துவார்கள். உங்களுக்கு வரும் முன்கோபத்திற்கு நீங்கள் எப்படி இத்தனை நாட்கள் ஒரே நிறுவனத்தில் பணிபுரிகிறீர்கள் என்றே எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. பேசும்போது டக்கென உங்களை நீங்களே கோமாளியாக்கிக்கொண்டு பேசுவதற்கு மின்சார சம்பவம்தான் உதாரணம். உடம்பை பார்த்துக்கொள்ளுங்கள். படிப்புக்கான

விஷயங்களை நிஜமாக்க உடம்பு முக்கியம். நன்றி!

அ.ராமமூர்த்தி
28.1.2019

64
# அன்பும், காமமும்!

இனிய தோழர் ராமுவுக்கு, வணக்கம். நலமாக இருக்கிறீர்களா?

கடிதம் எழுதுவதற்கு சற்று நிதானமான பொழுது கிடைக்கவில்லை. அதனால்தான் அடுத்தடுத்த கடிதங்களுக்கு இடையில் ஏகப்பட்ட நாட்கள் இடைவெளி. பொய் அல்ல உண்மை. நாங்கள் அடுத்து வரும் வாரம் வேறு அலுவலகத்திற்கு மாறுகிறோம். ராயப்பேட்டை அஜந்தாவில் இனி ஜாகை. இங்குள்ள வயதான ஆட்களுக்கு இசைந்து சொல்ல முடிவது கடினமாக உள்ளது. இங்குள்ள சீனியர்களுக்கு இடமாற்றல் முடிவு பிடிக்கவில்லை. அவர்களுடைய நெடுநாள் நண்பர்கள் பழைய அலுவலகத்தில் இருக்கிறார்கள். இதைவிட்டு வேறிடம் போய் என்ன செய்வத? என விவாதித்து வருகிறார்கள். நிர்வாகம் எடுக்கும் முடிவு

பத்திரிகையின் எதிர்காலத்திற்காகவே என்று நம்புகிறேன். நிற்பதற்கும், நடப்பதற்கும் பிறரிடம் அனுமதி கேட்டுக்கொண்டிருக்கும் நிலை இருக்கக்கூடாது என்று நினைக்கிறேன்.

எனக்கு வேலை சார்ந்துதான் அனைத்து உறவுகளுமே என்று நம்புகிறேன். அதைத் தாண்டிய உறவுகளை ஏற்படுத்திக்கொள்ள பெரியளவு முயற்சிகளை நான் எடுத்துக்கொள்ளவில்லை. அது அப்படியே இயல்பாக நடப்பதுதான். வலிந்து எதைச் செய்தாலும் எனக்கு ஒத்துவருவதில்லை. இந்த வாரத்தில் செக்ஸ் அண்ட் ஜென் என்ற படத்தைப் பார்த்தேன். எரோடிக் வகையைச் சேர்ந்த படம் இது.

அஜால் குஜலாக இருந்தாலும் மெசேஜ் முக்கியம் அல்லவா? அன்புக்கு அவசியத்தேவை உடலா? மனமா? என படத்தில் ஜல்சா செய்து முடித்து ஆற அமர முடிவு சொல்கிறார்கள். கணவன், மனைவி இருவருக்கும் திருமணம் நடக்கிறது. கணவருக்கு செக்ஸ் உறவில் ஒன், டூ, த்ரீ சொல்லி முடிப்பதற்குள் விந்து முந்திவிடுகிறது. இதனால் அவரது மனைவி கடுமையாக அதிருப்தி அடைகிறாள். இதனால் கணவர் அறுவை சிகிச்சை செய்து படா சைஸ் உறுப்புடன் ஊருக்குள் வந்து பெண்களை விரட்டு

விரட்டென விரட்டுகிறார். பெண்களை தேடிப்பிடித்து சுகிக்கிறார்.

சுகிப்பதில் வல்லவரான டானுக்கு டாட்டா சொல்லி அனுப்புகிறார். அதேசமயம் காமத்தில் நெய்யாக உருகிய நாயகனின் மனைவி, செக்ஸ் தேவைக்கான ஆட்களை கண்டுபிடித்து சுகிக்கிறாள். இவர்கள் இருவரும் தங்கள் தவறுகளை உணர்ந்து ஒன்றாக சேர்ந்தார்களா இல்லையா என்பதுதான் கதை. கதையைப் பற்றி இந்த படத்தில் யாராவது கவலைப்படுவார்களா? சந்தோஷமாக படத்தைப் பார்த்தால் மஜாவாக இருக்கும். படத்தை அப்படித்தான் இயக்குநர் எடுத்திருக்கிறார். பௌத்த மத துறவியின் தூய்மையை விலைமாது கெடுத்து அவர் தற்கொலை செய்துகொள்ளும் காட்சி படத்தில் நெருடலாக அமைந்துவிட்டது.

எங்கள் பத்திரிகையில் உள்ள உதவி ஆசிரியர்களிடம் மேட்டர்களை வாங்கி பத்திரிகையை பிரிண்டுக்கு அனுப்புவதற்குள் மண்டை காய்கிறது. அவ்வளவு அழகாக தினப்படி வேலையை அன்றுதான் செய்கிறார்கள் அதனை சரிபார்ப்பதற்குள் பிரிண்டாகி ஏ 4 வந்துவிடுகிறது. அப்புறம் அதில் தவறுகள் ஏற்படாமலா இருக்கும்? ஆசிரியருக்கும், உதவி ஆசிரியர்களுக்கும் ஏதோ முரண்பாடு

உள்ளது. எப்போதும் போல கிடைக்கும் நேரத்தில் சில விஷயங்களை எழுதி வைத்துக்கொண்டிருந்தேன்.

எப்படியிருந்தாலும் நமக்கு கிடைத்திருக்கும் எழுத்து திறமை மட்டுமே நம்மைக் காப்பாற்றும். உதவி ஆசிரியர்களின் கட்டுரைகளை திருத்தி கொடுப்பேன் என்று சொன்னால் நமக்கு அதில் எந்த பிரயோஜனமும் கிடைக்கப் போவதில்லை. ஜீ 5 ஆப்பில் வெளியான பி.டெக் என்ற வெப் தொடரைப் பார்த்தேன். நன்றாக எடுத்திருக்கிறார்கள்.

நடித்த நடிகர்கள் பெரும்பாலும் இளைஞர்கள் என்பதால் புரிந்துகொண்டு நடித்திருக்கிறார்கள். மூன்று கதைகள் கூறப்படுகின்றன. ஒருவர் குறும்பட இயக்குநர், அவர் திரைத்துறையில் நுழைய முயல அதற்குள் சந்திக்கும் சவால்கள். இரண்டு, பொம்மைக் கடையில் கல்வி சார்ந்த பொம்மைகளை விற்றுவருபவர். மூன்று பைக் ரேசர் ஒருவரின் கனவு. இந்த மூன்றும் தனித்தனியாக பயணித்து இறுதியில் எந்த புள்ளியில் ஒன்று சேருகிறது என்பதுதான் இறுதிக்காட்சி. பொம்மைகள் விற்கும் விற்பனை பிரதிநிதி மெல்ல தொழிலதிபர் ஆவது, பைக் ரேசர் தனது நண்பனின்

கனவுக்காக உழைப்பது ஆகிய இருகதைகளும் நன்றாக இருந்தன. வாய்ப்பிருந்தால் இத்தொடரை அவசியம் பாருங்கள்.

நன்றி!

சந்திப்போம்.

ச.அன்பரசு
23.2.2019

65
# கூண்டுப்பறவை ஏன் பாடுகிறது?

அன்புள்ள நண்பர் ராமமூர்த்திக்கு, வணக்கம். நன்றாக இருக்கிறீர்களா?

நாடு முழுக்க திமுகவின் திருமங்கலாம் ஃபார்முலா பரவிவிட்டது போல. தேர்தல் காலம்தோறும் மக்கள் டோக்கன்களை வைத்தபடி இரண்டாயிரம் ரூபாய்க்காக அலைந்து வருவது பார்க்கவே

சங்கடமாக உள்ளது. உரிமைகளை பெற கையேந்த வைத்துவிட்டு, சாத்தியம் இல்லாதது சாத்தியம் என மோடி கைகட்டி சிரிக்கிறார். நீங்கள் குளோபல் ஆக்டரை அப்படியே பின்பற்றி நிற்பீர்கள் அல்லவா? எனக்கு இந்த நேரத்தில் அந்தக் காட்சிதான் நினைவுக்கு வருகிறது.

முதன்மை செய்தித்தாளில் தேர்தல் களம் சார்ந்த பணிகள் தொடங்கியிருக்கின்றன. எங்களுக்கு மே 31 வரை வேலை இருக்கும் என்று நினைக்கிறேன். அறிவியல் நூல்கள் சிலவற்றை வாங்கவேண்டியதிருக்கிறது. பார்ப்போம்.. தேவையான நூல்களை முதலில் தேர்ந்தெடுத்துவிட்டு பின்னர் அதனை வாங்குவதற்கான நடவடிக்கைகளை தொடங்க வேண்டும்.

கிராக் பார்ட்டி —2018 படம் பார்த்தேன். தெலுங்கில் நிகில் சித்தார்த் நன்றாக நடித்திருந்தார். கன்னடத்தில் வந்த படத்தை ரீமேக்கியிருக்கிறார்கள். அனைவரையும் நன்றாக நடிக்க வைத்திருக்கிறார்கள். இறுதிவரை வரும் காமெடிக் காட்சிகளை படத்தை மறுபடியும் கூட பார்க்க வைக்கலாம். யூடியூபில் படம் உள்ளது. வாய்ப்பிருந்தால் பாருங்கள்.

மாயா ஏஞ்சலோ எழுதிய கூண்டுப்பறவை ஏன்

பாடுகிறது என்ற நூலைப் படித்தேன். கறுப்பர் இன பெண்ணின் சுயசரிதை. இந்தியர்களுக்கு மாயாவின் பளீரென்ற வாழ்க்கை நிச்சயமாக மனதைச் சுடும்.

நன்றி!

ச.அன்பரசு
7.3.2019

## 66
# மனிதர்களும் அரசியலும்!

அன்புள்ள அன்பரசுக்கு, வணக்கம். நன்றாக இருக்கிறீர்களா?

உங்கள் அலுவலகம் பற்றி எழுதியிருந்தீர்கள். நிறைய மனிதர்கள் இருந்தால் நிறைய பிரச்னைகள் கூடவே இருப்பது சகஜம்தான். வயதான மனிதர்கள் மட்டுமல்ல நமக்கும் வயதாகும் போது குறிப்பிட்ட காலகட்டத்தில் சிக்கிக்கொள்வோம். அதைத்தாண்டி வெளியே வர புதிய விஷயங்களைக் கற்கவேண்டும். குறைந்தபட்சம் மாதம் ஒரு புதிய நூலையாவது படிக்கவேண்டும். எத்தனை பேருக்கு இது சாத்தியம் சொல்லுங்கள்.

அலுவலக நடவடிக்கையில் உங்கள்

செயல்பாட்டைப் பார்த்தால் ஆசிரியரின் பக்கம் நிற்பது போல படுகிறது. கவனமாக இருங்கள். செல்வாக்கு பெற்றவர்களோடு கோபம் கொள்ளாதீர்கள். அது, செய்யும் வேலையை தலைவலியில் கொண்டு வந்து முடிக்கும்.

எதுவும் நிரந்தர வேலை என்று சொல்லமுடியாது. பத்திரிகை வேலையானலும் சரி, நான் செய்யும் வேலையானாலும் சரி. எங்களுக்கு வேலை போனால் நாங்கள் போராட்டம் நடத்துவோம். உங்களுக்கு அந்த வாய்ப்பு இல்லை. இன்னொரு நிறுவனத்தில் சிபாரிசு பிடித்து சேர்ந்துவிடுவீர்கள். காட்சி ஊடகம் சார்ந்து ஏதேனும் வேலையைத் தேடவும் வாய்ப்புள்ளது. பெரிய வாய்ப்புகள் நமக்கு முன் இல்லை. நீங்கள் தலைநகரத்தில் இருப்பது நல்ல விஷயம். நடக்கும் பல்வேறு நிகழ்ச்சிகளை உடனே அறிய முடியும் என்பது சாதகம். ஊருக்கு கிளம்பி வருவது என்பதை நீங்கள் திட்டமிட்டால்தான் சாத்தியம். டக்கென பஸ்ஸை பிடித்து வருவது என்பது அரசியல், பொருளாதாரங்களின் மைய நகரமாக இருக்கும் சென்னையில் சாத்தியம் இல்லை. முக்கியமாக எதையும் திட்டமிடலாம். அதன்படியே நடக்கும் என்று சொல்லமுடியாது.

எழுத்து சார்ந்த திறமையை நீங்கள் எப்போதும் வாசித்துக்கொண்டிருப்பதால் அதனை வளர்த்துக்கொள்ள முடியும். ஆங்கில நூல்களை வாசிப்பதில் கவனம் செலுத்துங்கள். ஆங்கில தினசரிகளைப் படித்தால் உங்களால் எளிமையாக நூல்களை வாசிக்க முடியும் என நினைக்கிறேன். ஏறத்தாழ இதில் உங்களுக்கு நான் சொல்லுவதற்கு ஏதும் இல்லை. நீங்களே நிறைய நூல்களை வாசித்துக்கொண்டுதான் இருப்பீர்கள். அனைத்து கட்சிகளுமே தேர்தல் சார்ந்த சீரழிவில் சிக்கிவருகின்றன. திமுக போன்ற கட்சி தேர்தலுக்காக பணம் கொடுப்பதும். அதனை பகிரங்கப்படுத்துவதம் தேர்தலையும் மக்களின் வாக்குரிமையையும் கொச்சைப்படுத்துகிறது.

திமுக சாதிக்கட்சிகளை வளர்த்துவிடுகிறது என காங்கிரஸ்காரரர்கள் சொல்லுவார்கள். நீங்களும் அந்தப்பக்கத்தில் நின்று பேசுகிறீர்களோ என்று சந்தேகமாக இருக்கிறது. தன்னை சீர்படுத்திக்கொண்டு திமுக மீண்டும் தமிழகத்தில் வெல்லும் என நம்புகிறேன். பார்ப்போம். உடலைக் கவனித்துக்கொள்ளுங்கள்.

நன்றி!

அ.ராமமூர்த்தி

நன்றியும் அன்பும்

கே.என். சிவராமன், குங்குமம் முதன்மை ஆசிரியர்

யெஸ்.பாலபாரதி, தினமலர் பட்டம்

கதிரவன் கருணாநிதி, குங்குமம் டாக்டர்

ஞானதேசிகன், ஆசிரியர், குங்குமம் டாக்டர்

கார்ட்டூன் கதிர்

வடிவமைப்பாளர் மெய்யருள்

சபாபதி

கணியம் சீனிவாசன்

ஃப்ரீதமிழ் இபுக்ஸ் குழுவினர்

பயன்படுத்திய மென்பொருட்கள்

லிப்ரே ஆபீஸ்

என்ஹெச்எம் ரைட்டர்

நூலில் பயன்படுத்தப்பட்ட படங்கள் பிக்ஸாபே,

அன்ஃப்ளாஸ் வலைத்தளங்களிலிருந்து பெறப்பட்டவை.

வலைத்தள பதிவுகளை வாசிக்க

Komalimedai.blogspot.com

பிரதிலிபி, ஃப்ரீதமிழ் இபுக்ஸ் வலைத்தளங்களில் பிரசுரிக்கப்பட்ட நூல்களின் அட்டைப்படங்கள் சில.

